# இரட்டையர் பிரபந்தங்கள்.

ஆராய்ச்சிகளுடன்



திருவாவடுதுறை ஆதீனம்

உ

# ஸ்ரீ ஆனந்தமாநடராஜர்

## அபிடேகநாள் வெளியீடு

விசய - ஆவணி - 7உ

திருவாவடுதுறையாதீன வெளியீடு – 67.

உ

சிவமயம்.

# இரட்டையர் பிரபந்தங்கள்.

1. தில்லைக்கலம்பகம்
2. திருவாமாத்தூர்க்கலம்பகம்
3. ஏகாம்பரநாதருலா

திருவாவடுதுறை ஆதீனம்.

ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.

இப்பிரதி வேண்டுவோர் தனித்தனி எட்டணுத் தபால் தலைச்சீட்டு ஆதீன லைபரேரியனுக்கு அனுப்பிப் பெற்றுக்கொள்க. ஒரு புத்தகத்துக்குமேல் ஒருவர் பெற இயலாது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இரட்டையர் பிரபந்தங்கள்.



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்**
கட்டளையிட்டருளியபடி

அவ்வாதீன வித்துவான்
**த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளையால்**
பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து
நூதனமாக எழுதிய ஆராய்ச்சி முதலியவற்றுடன்
பதிப்பிக்கப்பெற்றது.

---



விசய – ஆவணி.
1953.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

" கயிலாய பாம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மாபுடையோன் றிருமாபு நீடூழி
தழைக மாதோ. "

திருச்சிற்றம்பலம்.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.



இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக மூர்த்திகள்

உ

சிவமயம்.

# முகவுரை.

---

## தேவாரம்.

---

திருச்சிற்றம்பலம்.

"அரியானை யந்தணர்தஞ் சிந்தை யானை
அருமறையி னகத்தானை யணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே."

திருச்சிற்றம்பலம்.

— திருநாவுக்கரசுசுவாமிகள்.

தெய்வச் செந்தண்டமிழ் மொழிக்கு உரியனவாகக் கொள்ளப்படும் பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு என்பர் பெரியோர். கலம்பகம் என்னும் பிரபந்தமும் அவற்றுள் ஒன்றாகும். கலம்பகத்துக்குரிய இலக்கணம் பன்னிருபாட்டியல், வச்சணந்திமாலை, இலக்கணவிளக்கப்பாட்டியல் முதலிய நூல்களால் அறியப்படும். இதன் இலக்கணம் வருமாறு:—

"ஒருபோகும், வெண்பாவும், கட்டளைக்கலித்துறை யும் முதற்கவியுறுப்பாக முதலிற்கூறிப் புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் இப்பதினெட்டுறுப்புக்களும் இவையு மாறு மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, கலிநிலைத்துறை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, ஆசிரியத்துறை, வெண்டுறை முதலியவற்றால் இடையிடையே வெண்பாவும் கலித்துறை யும் விரவிவர மடக்குடைச் செய்யுளும், வண்ணம், சந்தம் முதலியனவும் பொருந்த அந்தாதித் தொடையால் முற்றுற இறுதியும் முதலும் மண்டலித்துப்பாடுங்கால் நூறும், தொண்ணூற்றைந்தும், தொண்ணூறும், எழுபதும், ஐம்ப தும், முப்பதுமாகப்பாடுவதொரு பிரபந்தமாம்."

"சொல்லிய கலம்பகஞ் சொல்லி லொருபோகு
முதற்கண் வெண்பாக் கலித்துறை புயமே
அம்மனை யூசல் யமகங் களிமறஞ்
சித்துக் கால மதங்கி வண்டே
கொண்டன் மருள்சம் பிரதம் வெண்டுறை
தவசு வஞ்சித் துறையே யின்னிசை
புறமே யகவல் விருத்த மெனவருஞ்
செய்யுட் கலந்துட னெய்திய வந்தம்
ஆதி யாக வருமென மொழிப."

—பன்னிருபாட்டியல்.

**'கலம்பகத்துக் கிரட்டையர்கள்'** என ஆன்றோர்களால் சிறப்பாக எடுத்துக் காட்டப்பட்ட அவருடைய பிரபந்தங்களில் இரண்டு கலம்பகங்கள் உள. ஒன்று தில்லைக்

கலம்பகம், மற்ருென்று திருவாமாத்தூர்க்கலம்பகம். இக் கலம்பகங்கள் இரண்டும் சொல்லாலும் பொருளாலும் தமக்குத் தாமே ஒப்புடையன. இரட்டைப்புலவர்களாகிய இவர்கள் வாக்கில் சிவபரத்துவம் கொழிக்கும். "சிதம்பர தரிசனத்திற்கு வந்த இரட்டையர்களைநோக்கி 'திருப்பாதிரிப் புலியூருக்குத் தொல்காப்பியத்தேவர் இயற்றியதுபோல நீங் கள் இத்தலத்திற்கு ஒருகலம்பகம் இயற்றியருள வேண்டும்' என்று அக்காலத்திலே சிதம்பரதலத்திலேயுள்ள அடியார் குழாங்கள் வேண்டினர். இரட்டையர்கள்" சிவபெருமான் மீது கலம்பகம்பாடுதற்குயாம் வல்லேமல்லேம்" என்ருர்கள். கேட்டவர்கள் அதனல் தடைப்படலின்றிப்பின்னும்வற் புறுத்த, அவர்கள் அப்பொழுதும் துணிவின்றித் திருப் பாதிரிப்புலியூர்க்கலம்பகச் சுவடியிற் கயிறுசாத்திப்பார்த்த னர். அப்பொழுது அக்கலம்பகத்தில் உள்ள "பாடுவார் பாடும் பரிசில் வரிசை யெல்லாம்—ஆடுவாரன்றி அயலா ரறிவாரோ—தோடுவார் காதன்றே தோன்ருத் துணையையர் —பாடுவார் ஒிருவர்க் கிட்ட படைவீடே" என்னும் பதினு ரும் பாடல் அகப்பட்டது. அதனைக்கண்ணுற்று இப்புலவர் கள் இப்பாடலின் பின்னிரண்டடியின் பொருளையறிந்து மனமுருகித் தம்மைப்பாடும்படி **ஸ்ரீ ஆனந்தநடராஜரே** கட்டளையிட்டருளியதாக நினைந்து '**தில்லைக்கலம் பகத்தை**' இயற்றி முடித்தார்கள்" என்பர் பெரியோர். இவ்வரலாறு தமிழ் நாவலர் சரிதையிலிருந்து ஊகித்தறிந்து எழுதப் பெற்றதென்பர் மகா மகோபாத்தியாய-டாக்டர்-ஸ்ரீமத் ஐயரவர்கள்.

தில்லைக்கலம்பகம் தில்லையினது கலம்பகம் என விரி யும். ஆரும் வேற்றுமைத்தொகை. இரண்டனுருபும் பொரு

ளும் உடன் தொக்க தொகையாகக்கொண்டு, தில்லையைப் பற்றிய கலம்பகம் எனவும் பொருள் கொள்ளலாம். எனவே, தில்லையில் கோயில் கொண்டருளும் ஸ்ரீ நடராசப்பெரு மானைப்பற்றிப்பாடியபிரபந்தம் என்பது கருத்து. இப்பிர பந்தத்திலே 'பலவகைப் பொருள்களும் அகப்புறத்துறை களிற் பலவும் பலவகையாப்புக்களும் விரவிக்கலந்தமையின் இப்பெயர்வந்தது' என்பர் பெரியோர்.

தேவாரம் பெற்ற சிவதலமாகிய கோயில், தில்லை, சிதம்பரம் எனவும் பெயர்பெறும். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம்—2, திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பதிகம்-8, சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம்-1. (ஆக -11.) தில்லைச்சிற்றம்பலம், பெரும்பற்றப்புலியூர் என் பன தேவாரத்தில் பயின்று வந்துள. 'தில்லைபாதி திருவாசகம் பாதி' என்னும் பழமொழி மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த திருவாசகத்திலே பெரும்பகுதியும் தில்லைச் சிற்றம்பலவரைப் போற்றியதென்பதை விளக்கும். திருக் கோவையார் முழுவதும் தில்லைக்கூத்தனுரையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளதாகலின் திருச்சிற்றம்பலக்கோவை யார் எனவே அது வழங்கப்படும். ஆன்றோர் திருக்கோவை யாரைக்கோவைத்திருவாசகம் எனவே வழங்குவதுங்காண்க. இதனுல், திருக்கோவையார் திருவாசகத்தின் பகுதியே ஆம் என்பது பெறப்படுகின்றது. இனி, திருவிசைப்பா ஆசிரியர் கள் பெரிதும் சிதம்பரத்தையே போற்றியிருக்கின்றனர். திருவிசைப்பாவிலே பதினைந்து திருப்பதிகங்கள் தில்லையைப் பற்றியனவே. சேந்தனுர் அருளிச்செய்த திருப்பல்லாண்டு கோயிலைப்பற்றியதாக ஒரு திருப்பதிகமே உள்ளது. பதின் மூன்று திருப்பாட்டுக்கள் உள்ள அப்பதிகத்து முதற்றிருப்

பாட்டிலே 'மன்னுக தில்லை வளர்க நம்பத்தர்கள்' என்று அருளியிருப்பது காண்க. பத்தாந்திருமுறையாகிய திருமந்திரமாலையில் பல பகுதிகள் தில்லைக்கூத்தப்பிரானுருடைய கூத்துக்களின் சிறப்புக்களையே பேசுகின்றன. திருவம்பலச் சக்கரம் என்னும் பகுதி யந்திர மந்திர முறைகளை அறிவிக்கின்றன. பதினோராந்திருமுறையில் சேரமான்பெருமாள் நாயனர் அருளிச்செய்த பொன்வண்ணத்தந்தாதியும், பட்டினத்துப்பிள்ளையார் அருளிச்செய்த கோயில்நான்மணிமாலையும், நம்பியாண்டார்நம்பிகோயிற்றிருப்பண்ணியர்விருத்தமும் இத்தலத்தைப் பற்றியனவே. திருத்தொண்டர் பெரிய புராணமாகிய பன்னிரண்டாந்திருமுறையிலே தில்லை வாழந்தணர் புராணம், திருநாவுக்கரசுசுவாமிகள் புராணம், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணம், திருநாளைப் போவார்நாயனர் புராணம் முதலிய புராணங்களிலும் இத்தல சம்பந்தமான செய்திகளும் ஸ்ரீநடராச மூர்த்தியின் பெருமையும் பேசப்பட்டுள்ளன. சந்தானகுரவருள் ஸ்ரீ உமாபதி சிவம் செய்தருளிய கோயிற்புராணம், கொடிக்கவிகளும் இத்தலச்செய்திகளேயாம்.

இனி, பிற்காலத்து ஆன்றோர்களில் பெரும்பற்றப்புலியூரானைப் பேசாதோர் யாவர்? இத்தில்லைக்கலம்பகத்தையன்றி, புராணத்திருமலைநாதர் செய்த சிதம்பர புராணமும், யாழ்ப்பாணத்துத்தெல்லிப்பிழை சிவாநந்தையர் இயற்றிய புலியூர்ப்புராணமும், இயற்றினர்பெயர் அறியப்படாத தில்லையுலாவும், ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் அருளிச்செய்த சிதம்பரமும்மணிக்கோவை, சிதம்பரச்செய்யுட்கோவைகளும், தருமபுர ஆதீனத்து ஸ்ரீசிதம்பரநாத முனிவர் அருளிய நடராசசதகமும், தில்லைவிடங்கன் மாரிமுத்துப்

பிள்ளையால் இயற்றப்பெற்ற புலியூர்வெண்பாவும், இவ் வாதீனத்து மஹாவித்துவான்—திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய தில்லையகமவந்தாதியும், இவ் வாதீன வித்துவசிரோமணி சபாபதிநாவலரவர்கள் இயற்றிய சிதம்பரசபாநாத புராணமும்—திருச்சிற்றம்பல யமகவந்தாதியும் இத்தல சம்பந்தமானவையே. தனிச்செய்யுட்கள் எத்தனையோ பல. காளமேகப்புலவர் பாட்டுக்களும் உள. 'சிற்சபையிலானந்தநிர்த்தமிடு கருணாகரக்கடவுளே' எனத் தாயுமானவ சுவாமிகள் பத்துப்பாடல்களால் தனியே துதித் திருக்கின்றனர். கல்லாடனார் இயற்றிய கல்லாடமும் தில்லையையே கூறுவது.

இனி, இப்புலவர்கள் தில்லைக்கலம்பகம் பாடத் தொடங்கி ஆன்றோர் ஆசாரப்படியே இந்நூலுக்கு விநாயகர் காப்பாக 'கற்பக விநாயகக்' கடவுளை அமைக்கின்றனர். அவ் விநாயகரைப்பாடவந்தவர் 'கந்தனுக்கு முன்பிறந்த கற்பக மால் யானை' என முருகவேளையும் கூடவைத்துப்பாடினர். இதனால், செங்குந்தர் மரபில் தோன்றிய அவர்கள் இயல் பாகவே தம்மரபினருக்குள்ள சிவபத்திச் செல்வத்துடன் சிறப்பாக அமைந்த முருகபத்தியையும் வெளிப்படுத்தியமை காணலாம். முதற்பாடலிலே தில்லையாகிய பெரும்பற்றப்புலி யூரிலேயுள்ள மன்றங்கள் திருச்சிற்றம்பலம், பொன்னம்பலம் பேரம்பலம் எனக்குறிக்கப்பட்டுள. இறைவர் திருவடி சாலோக, சாமீப, சாரூபந்தருவன என்றும், அதனால் சிவ கங்கையில்நீராடித்திருவைந்தெழுத்தை விதிப்படிகணித்துப் பூமாலை புனைந்தேத்திச் செனனம் நீங்குதற் பொருட்டு மலர் சிலம்படியைப் போற்றுவோம் என்றும் அம்முதற்பாடலி லேயே வைத்துக் கூறியதிறம் போற்றுதற்குரியது. இதனால்,

பெரும்பற்றப்புலியூரானைப் போற்றுவதாற் பெறும்பயன் செனனம் நீங்குவதென்பதும், அதற்குரிய சாதனங்கள் சிவ கங்கையில் ஆடுதலும், திருவைந்தெழுத்து நவிறலும், பூமாலை புனைதலும், அப்பெருமான் மலர்சிலம்படி பரவுதலுமே ஆம்: பிறிதன்று என்பதும் தெளிவாக உணர்த்தப்பட்டமை காண்க. இனி, பொருள் வடிவாய் நின்ற புனிதராகிய தில்லை வானவர் கயவர்க்கு இருள்வடிவாய் நின்ற இறைவர்' எனக் குறிப்பிடுகின்றனர். இத்தொடர்மொழி எத்துணைச்சிறந்த ஆழமான பொருண்மொழி என்பதை உய்த்துணர்க.
இதனை—

" மெய்கலந்தாரோடுமெய்கலந்தான்றன்னைப்
போய்கலந்தார்முன்புகுதாவொருவனை
உய்கலந்தூழித்தலைவனுமாய்நிற்கும்
மெய்கலந்தின்பம்விளைந்திடும்மெய்யர்க்கே "

என்னும் திருமந்திரத்தால் அறியலாம். மற்றும், "கரவாடும் வன்னெஞ்சர்க்கரியானைக் கரவார்பால்–விரவாடும்பெருமானை விடையேறும் வித்தகனை" என்ற திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாக்கானுமறிக. "ஐயனை அத்தனை ஆளுடையாமாத் தூரண்ணலை—மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொருளான விமலனை" என்பது சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்.

இனி, திருமால் சக்கரம் பெற்றமை, வெண்பலியேற்றல், கம்பள அசுவதரர் தவஞ்செய்து காதிலே குண்டலமாக இருந்து இறைவருக்கு இசைத்தொண்டு செய்தல், இறைவர் சுந்தரமூர்த்திசுவாமிகள் பொருட்டுப்பரவைபார் பால் தூது சென்றமை, ஆற்றிலிட்டபொருளைக் குளத்தில் அழைப்பித்தது, செங்கல்லைப்பொன்னாக்கியது, மாணிக்க

வாசகசுவாமிகள் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையாரை இறைவர் எழுதியமை, சிறுத்தொண்டநாயனார் பால் பிள்ளைக் கறி வேண்டினமை, மூவர் அருளிய தேவாரத்திருப்பாடல்களில் இறைவர் மிகவிருப்பம் வைத்தல் முதலிய பல வரலாறுகள் அங்கங்கே பேசப்படுகின்றன. தில்லையில் நடராச மூர்த்தியைத் தரிசித்தோர் பெறும்பேறும், தரிசியாமல் அவமே பொழுது கழிப்பார் அடையும் பயனும் நன்கு கூறப்பட்டுளது. சிவபெருமான் கரத்தில் மான்தாவுதற்குக் கற்பித்த காரணம் வியத்தற்குரியது. சிவபெருமானுக்கு ஒப்பாகச் சிலர் மால்பிரமர்களைக்கூறுதல் அடாது என்கின்றனர். சிதம்பரத்திலே சென்று 'எப்படிச்செத்தாலும் நல்லதே' என்று கூறுதல் நெஞ்சை உருக்க வல்லதாம். பதமுத்திகளை யெல்லாம் தரவல்லது அருள்வடிவாகிய திருவம்பலமே; பேரம்பலவனை நினையும் போதே சாரூபம் கிடைக்கும்; தமர் தந்தையரொடு அம்பலவாணரைச் சரண்புகுவது எளிது; அம்பலவாணர் திருவடிகளில் அன்பு செய்யாதவர் நிரயம் புகுவர்; கயிலைக்கல்லில் இருக்கும் தேவரீர் எமது நெஞ்சக் கல்லில் இருப்பதும் கடனாகும்; சிவபெருமானையன்றிப் பிற தேவருக்கு ஆன்மாக்களின் பிறப்பறுத்தல்கூடாது என்ற செய்திகள் வற்புறுத்திக் கூறப்படுகின்றன. இனி, தில்லையரனுக்குத்தலம்—நெல்லை, முல்லைவாயில், நல்லம், வில்லவனம், நெல்லிக்கா, நல்லூர், மல்லைநகர், கொல்லம், வில்விபுரம், வல்லம், குல்லைவனம், கொல்லிமலை எனக்குறிக்கின்றனர். குடந்தை, கடவூர், தென்குடி, வலஞ்சுழி, புறம்பயம், எறும்பிமலை, செம்பியனல்லூர், அன்பில், புறவம், பழனம், வஞ்சிகளம், இஞ்சிகுடி, அம்பல் முதலிய சிவதலங்கள் அடைமொழியின்றிப்பாடப்பட்டுள. 'புலவோர் தமிழ் இரு

செவிக்குள் வைத்தனே' என மூவர் அருட்பாக்களைப் போற்றிப் பாதுகாக்கின்றனர். தெள்ளுமூவர் கவிதைச்சுமந்தன எனத்தேவாரத்திருமுறையை விதந்து கூறுகின்றனர். இறுதியாகவுள்ள உயிர்வருக்கமோனை ஆசிரியப்பாவிலே பல சிவ தலங்களை எடுத்துக் கூறிச்சிறப்பிக்கின்றனர். சிதம்பரம், ஆரூர், இடைமருது, ஈங்கோய்மலை, உறையூர், ஊறல்மாநகர், எறும்பிமாமலை, ஏடகம், ஐயாறு, ஒற்றியூர், ஓமாம்புலியூர் என்பன அத்தலங்கள். அம்பலக்கூத்தன் எனத்தொடங்கி ஓமாம்புலியூர்ச்சிற்றம்பலவன் என முடிக்கின்றனர். பிருதிவித்தலம் முதலிய ஐம்பூதத்தலங்களும், ஐந்து சபைகளும் பேசப்படுகின்றன. இதில் காஞ்சீபுரம் பிருதிவித்தலம் எனக் குறித்தனர். குற்றாலம்—சித்திரசபை, பழையனூர் (திருவாலங்காடு)—இரத்தினசபை, திருநெல்வேலி—தாம்பிரசபை, (ஆலவாய்) மதுரை—வெள்ளியம்பலம் (இரசதசபை), தில்லை—பொன்னம்பலம் (கனகசபை) என இறைவர் ஐந்து சபைகளும் தெளிவாகக் கூறப்பட்டுள. எல்லாநீரினும் சிவகங்கை நீரே சிறந்ததெனப் போற்றுகின்றனர்.

பதஞ்சலி வியாக்கிரபாதருக்காக நடனம் செய்தமையும் கூறப்படுகிறது. தெரிசிக்க முத்திதரும் நித்தர் பொற்பதத்தை மறவாமல் பரிசிக்க, வசனிக்க, பணிய, மலரால் அருச்சிக்க, பிரதக்கணம் செய்ய முத்திதருவார் எனக் கூறுவர். எழுபிறப்பும் தொல்லை (துன்பம்) எனவும், சிவகாமிநிலை, சிதம்பரம், திருமூலட்டானம், சிவகங்கை, மகுடாகமம், தலபுராணம், சபை, நான்மறை, சோதிநடமாடல்இவையெல்லாம் தொல்லை (பழமை) எனவும் குறிப்பிடுகின்றனர். சிதம்பரேசர் பூசை மகுடாகமப்படியே என்று எடுத்துக்காட்டினர். தில்லைக்கலம்பகத்து முதலுறுப்பாக நேரிசையொத்தாழி

சைக்கலிப்பா, நேரிசைவெண்பா, கட்டளைக்கலித்துறையைத் தொடங்கினர். கலம்பக உறுப்புக்களாக—புயவகுப்பு-13, மதங்கியார்-23, களி-31, இடைச்சியார்-37, காலம்-39, கொற்றியார்-56. அம்மானை-60, பாண்-62, மறம்-68, ஊசல் -70, குறம்-72, சித்து-76, சம்பிரதம்-78, மேகவிடுதூது-80, தழை-85, பிச்சியார்-87 என்பன வந்துள்ளன. மருட்பா-54, மடக்கு-18, 30, 89, வகுப்பு-66, இரங்கல்-5, 6, 7, 14, 16, 34, 36, 40, 43, 46, 48 ,50, 74, 82, சந்தவிருத்தம்-58.

அகப்பொருட்செய்திகளாக—நாணிக்கண் புதைத்தல், வறுங்களம் நாடிமறுகல், தூது, அவயவத்தருமை சாற்றல், இடமணித்தென்றல், இரங்கல், அவயவங்கூறல், முதலிய துறைகள் காணப்படுகின்றன காந்தண்மலர் மலையிலே மலரும் முறைமாறிக் ‘கடலிலே மலர்வது புதுமை’ என நாணிக்கண் புதைத்தலைக் கற்பித்துக் கூறுகின்றனர். (கடல் —கண்; காந்தள்—கை.) இடமணித்தென்ற துறையிலே— கொள்ளிடம், ஆயிக்கால் மண்டபம், திருமதில், பசும்பொற் றேர், நூற்றுக்கால்மண்டபம், சிவகங்கை, கனகசபை, தில்லைச்சிதம்பரம், கோபுரம், தில்லை மூவாயிரவர் என்பன குறிக்கப்பட்டுள்ளன.

சில சொற்கள்— கோனிச்சி, தேனித்தல், பூவணிக வேளாளர், தில்லைக்கோவிந்தர் என்பன,

ஆவணி-புரட்டாசி, ஐப்பசி—கார்த்திகை, மார்கழி—தை, மாசி—பங்குனி, சித்திரை—வைகாசி, ஆனி -ஆடி மாதங்களில் ஆவணி, ஐப்பசி, மார்கழி, மாசி, சித்திரை, ஆனி மாதங்கள் எதுகையில் வைத்துப்பாடப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**இறைவர் திருநாமங்கள்**—அம்பலவர், குவளைக் கண்டன், நீலமிடற்றீசன், தில்லைவானவன், தென்புலியூரன், பசுபதி, அம்பலத்தாடி, பேரம்பலவன், தில்லையம்பலவர், தில்லையம்பலக்கூத்தர், திருவம்பலவர், விடைக்கொடியார், ஆதிபுலியூரர், சபையினில்வரதர், தில்லைநிருத்தர், தில்லைநடராசனர், கனகசபைக்கடவுள், ஏமசபைவாணர், அம்பலத்தாடுமையர், தில்லைவாணர், கனகசபாபதி, புலியூரம்பலவர், சபையில் நடித்த சித்தர், காசிக்கும் சேதுவிற்குந்தலைவர், விரிஞ்சற்கும் முகுந்தற்குந்துரை, தில்லையம்பல வாணனர் முதலியன.

**அம்மையார்:** சிவகாமி, சிவகாமவல்லி, சிவகாம சுந்தரி என்பன.

**தீர்த்தம்:** சிவகங்கை.

**சுவாமி:** திருமூலட்டானேசுரர்.

**தேவி:** உமையம்மை.

**விநாயகர்:** கற்பக விநாயகர்.

**மதுரைத்திருவிளையாடல்கள்:**— சங்கப்பலகையில் இருந்து தமிழாராய்ந்தது, பாணனுக்குப் பொற்பலகையிட்டது, நரியைப்பரியாக்கியது, பிட்டுக்குமண்சுமந்தது முதலியன.

மார்கழித்திருமஞ்சனம் சொல்லப்பட்டது.

**சில குறிப்புக்கள்:**

1. சிற்சபை—திருச்சிற்றம்பலம். (பராசத்தி வடிவம்)

2. கனகசபை—பொன்னம்பலம். திருமஞ்சனத்துக்கு மூர்த்தியை எழுந்தருளப்பண்ணுமிடம்.

3 தேவசபை—பேரம்பலம். (உற்சவமூர்த்திகள்.)

4. நர்த்தனசபை—கொடிமரத்தின் தென்புறம் ஊர்த்துவதாண்டவர்.

5. இராஜசபை—ஆயிரக்கால் மண்டபம்.

அருவம்—திருவம்பலசக்கரம்—மந்திரவடிவம்.

உருவம்—ஸ்ரீ நடராஜ மூர்த்தி.

அருவுருவம்—அழகிய திருச்சிற்றம்பலமுடையார்.

### ஸ்ரீநடராஜர் அபிஷேகதினம்.

---

சித்திரையில் ஓணமுதற் சீரானி யுத்தரமாம்
சத்ததநு ஆதிரையும் சார்வாகும்—பத்திவளர்
மாசிஅரி கன்னி மருவு சதுர்த்தசிமன்
றீசரபி டேகதின மாம்.

## 2. திருவாமாத்தூர்க்கலம்பகம்.

திருவாமாத்தூர்க் கலம்பகம் என்பது திருவாமாத்தூரினது கலம்பகம் எனவிரியும்; ஆறும்வேற்றுமைத்தொகை. திருவாமாத்தூரைப்பற்றிய கலம்பகம் என இரண்டன் உருபும் பொருளும் தொக்கதொகையாகவும் கொள்ளலாம். திருவாமாத்தூரில் கோயில் கொண்டருளும் சிவபிரானுகிய அழகியநாதரைப்பற்றிய ஒருபிரபந்தம் என்பது கருத்தாகக் கொள்க. அம்மையார் திருநாமம் அழகியநாயகி என்பர்.

இத்தலம் விழுப்புரத்திற்கு அண்மையில் மூன்று கல்தொலை வில் வடமேற்கில் இருக்கிறது. பசுக்கள் பூசித்துப் பரம சிவனைத் தமக்குப் பாதுகாப்பாகக்கொண்ட தலம் என்பர், இராமபிரானல் பூசிக்கப்பெற்றது பிருங்கி முனிவரும் பூசித் துச் சாபம் நீங்கப்பெற்றார் என்ப. ஸ்தல விருட்சம்— வன்னி. சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கியும், அம்பிகை சந்நிதி மேற்கு நோக்கியும் உள்ளன கோமாதுருபுரம் என்பது இத்தலத்துக்கு வடமொழிப்பெயர். தேவாரத்திருப்பதிகம் பெற்றது (திருஞான—பதிகம்-2; திருநாவு – திருக்குறுந் தொகை-1, திருத்தாண்டகம்-1; சுந்தர-1 ஆக-5.)

**ஆமாதை:** ஆமாத்தூர் என்பதன் மரூஉ.

**இறைவர் திருநாமம்:** அழகியநாயகர், மாதை நாதனர், மாதைபுங்கவன், மாதைப்பரஞ்சுடர், மாதைநாயகர். ஆமாத்தூர் அழகனர் என்பன.

**அம்மையார்:** அழகியநாயகி.

**விநாயகர்:** மால்துயரந்தீர்த்த விநாயகர்.

**நதி:** பம்பைத்துறை, பம்பைத்திருநதி, பம்பைநதி.

**சில குறிப்புக்கள் :-** இறைவர் வந்திப்பவர்தம் மனக் கோயில்கொண்டவர்எனல்; அரிக்குப்பொருள் இன்னதெனல்; அழகியநாதரடியவர் இயல்புகள். 'இடையனெறிகின்றமரம் என' என்ற உவமைகாட்டப்பட்டுளது. முதற்பாடலில் மணச்செய்திகள் விளக்கப்பட்டுள. தொல்காப்பியத்தேவர் இயற்றியுள்ள திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகப்போக்கை யொட்டியே இக்கலம்பகம் செய்யப்பட்டது. ஆயினும், சிவ பரத்துவம் நனிமிகக் கொழிப்பதாம். மடக்குகள் இன்பந் தருவன. சைவசித்தாந்த சாஸ்திரக்கருத்துக்கள் இதில் அருமையாகவுள்ளன,

இக்கலம்பகச் செய்யுள் தொகை காப்பு-1 நூல்-101 ஆக 102. கலம்பகத்துக்குரிய பதினெட்டு உறுப்புக்களுள் இந்நூலில் வந்தவை வருமாறு:- புயவகுப்பு-7, வலைச்சியார்-28, சம்பிரதம்-46, குறம்-53, மடக்கு-51, இடைச்சியார்-54, மறம்-56, அம்மானை-67, கொற்றியார்-77, சித்து-88-89, காலம்-95, ஊசல்-96, மதங்கியார்-97, பாண்-100. இவை களையன்றி **யோகினியார்** என்ற உறுப்புப் புதிதாக இதன் கண் வந்துள்ளது.

மதங்கியார்-வாள்சுழற்றி ஆடுபவள், பிச்சியார்-சிவ வேடம் புனைந்து வருபவள், கொற்றியார்-வைணவ வேடத்தினள், மறம்-மறக்குலத்துப்பெண்ணை ஒரு வேந்தன் மணம் பேசிவிடுப்ப வந்த அத்தூதனை அச்சாதித்தலைவன் சினந்து கூறல், குறம்-குறத்தி குறிகூறுதல், சம்பிரதம்-பிறரால் இயற்றமுடியாத அரிய செயல்களைத் தாம் இயற்றுவதாகத் தோற்றும்படி ஒருவன் கூறுதல், சித்து-இரசவாதம் செய்யும் சித்தனைத் தன்னை ஒருவன் கூறுவது, களி-கட்குடியன் கள்ளைச்சிறப்பித்துக்கூறுவது, அம்மானை-மகளிர் மூவர்பாடி அம்மானை ஆடுவதாகக்கூறல்.

இனி, அகப்பொருட் செய்திகளுக்குரிய துறைகள் வருமாறு:- தலைவன் குறைநயந்துரைத்தல்-8, வறும்புனங் கண்டுமறுகல்-9, கழிக்கரைப்புலம்பல்-10-73, அருந்தவர் வாய்மை வற்புறுத்தல்-11, தலைவிபுள்ளொடு கிளத்தல்-13, பருவங்கண்டுபெருமகள்புலம்பல்-15, தலைவி ஆற்றுத்தன்மை கூறல்-16, மெய்தொட்டுப்பயிறல்-18, தலைவன்பிரிவு பாங்கியறிந்து தன்மனத்தழுங்கல்-19, தலைவிகார்காலங்கண்டு இரங்கல்-20, தலைவன் மேகத்தொடுபுலம்பல்-24-93, தலைவிசெக்கர் கண்டு இரங்கல்-25, தலைவி நிலவு கண்டிரங்கல்-26, தலை

வன் வருந்திபமை பாங்கி தலைவிக்கு உரைத்தல்-29, தலைவி கையாறெய்திடுகிளவி-30-41, தலைவியை முன்னிலையாக்கல்-31.69-83, தலைவன் குறிப்புவேறாக நெறிப்படக்கூறல்-32, தலைவிவலம்புரி கேட்டு உளமகிழ்தல்-33, தலைவிபாங்கனொடு உற்றதுரைத்தல்-36, காமமிக்க கழிபடர்கிளவி-38-59-87, தலைவியைப்புகழ்தல்-39-50, தலைவன் அழுங்கல்-44, தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்கல்-45, பொய்பாராட்டல்-48, தலைவன் புல்லொடுகிளத்தல்-52, தலைவன்நீடத் தலைவிவருந்தல-57-72, தலைவன் முறுவற்குறிப்பு உணர்தல்-62. இறைவன்றனக்குக் குறைநேர் பாங்கி இறையோற்கண்டமை கூறல் -63, தலைவன்வறுங்களநாடி வருந்தல்-79, தலைவிகுருகொடு கையாறெய்திடுகிளவி-74, தலைவன் நெஞ்சொடுவருந்தல்-79, தலைவன் உருவெளித்தோற்றங்கண்டு உளமறுகல்-94, தழை விருப்புரைத்தல்-98 என்பன இந்நூலுள் வந்தன.

## 3. ஏகாம்பரநாதருலா.

இனி, தமிழ்மொழிக்கு உரியனவாகக் கூறப்படும் 96-வகைப் பிரபந்தங்களுள் உலா என்பதும் ஒன்று. உலாப்புறம் எனவும் இது வழங்கப்படும். பேதை முதல் பேரிளம்பெண் ஈறாகவுள்ள எழுபருவ மாதர்களும் மால்கொள்ளும் வண்ணம் தலைவன் வீதியிற் பவனி போந்தான் என்று கலிவெண்பாவால் கூறப்படுவது இப்பிரபந்தம். பன்னிருபாட்டியல் முதலியவற்றில் இதன் இலக்கணவிரி பேசப் படும். உலாச்செய்யுள் பாடாண்டிணையின்பாற்படும். இங்கே கூறப் பட்ட எழுபருவமகளிரும் பொதுமகளிராவர். இதுபோன்ற சைவப்பிரபந்தங்களில் கூறப்படுவோர் உருத்திரகணிகையராவர்.

"திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்கை
மறந்தயர வந்தான் மறுகென்—றறைந்தகலி
வெண்பா வுலாவாம் ....." என்பது வச்சணந்திமாலை.

தமிழ் நாட்டில் உலாப்பிரபந்தங்கள் பல வழங்குகின்றன. தாம் வழிபடுதற்குரிய கடவுளர்மீதும் தம்மை ஆதரித்த தலைவர்கள் மீதும் பண்டைக்காலந்தொடங்கியே பெரியோர் இதனைப் பாடி வருகின்றனர். மிகப்பழையதாகவுள்ளது சேரமான் பெருமாள் நாயனார் செய்தருளிய ஆதியுலா. அது சிவபிரான் மீது பாடப்பட்டது. கவிராக்ஷஸ கூத்தன் கவிச்சக்கரவர்த்தி பாடிய மூவருலா சோழ அரசர் மூவரைப்பாடியது.

ஏகாம்பரநாதருலா என்பது காஞ்சியம்பதியில் கோயில் கொண்டெழுந்தருளிய சிவபெருமான் மீது இரட்டையர் இயற்றியது. இதிலுள்ள கண்ணிகள்—556. தேவாரம் பெற்ற தலம் இது: கச்சியேகம்பம் என்பது.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான், ஸ்ரீகாஞ்சியம்பதியும் தீர்த்தக்குழாங்களும் ஸ்ரீ ஏகாம்பரநாதருமாக எழுந்தருளியுள்ளார். இறைவரே மூர்த்தி தலம் தீர்த்தமாக இருந்து ஆன்மாக்களை உய்யச் செய்வர். ஸ்ரீகாஞ்சிபுரத்தில் உள்ள சிவதலங்கள் பலவற்றுள்ளும் கச்சியேகம்பமே சிறந்த தென்பர். அத்தலத்திலேதான் உமாதேவியார் ஒருமாவின் கீழாகிய சிவபிரானைப்பூசித்தார். நான்கு வேதங்களாகிய மாமரம் தல விருக்ஷம்.

சிவபெருமான் கயிலாயமலையில் தமது திருவருட் சிற்சத்தியாகிய உமாதேவியாருடன் வீற்றிருந்தார். அம்மையார் விளையாட்டாக இறைவருடைய திருக்கண்களைத் தமது திருகரத்தால் பொத்தினர். சூரிய சந்திரர்களுடைய வெளிச்சமின்றி உலகம் இருளடைந்தது. பொத்தியது ஒரு நொடிப்பொழுதாயினும் உலகத்துக்குப்பல வூழிக்காலஞ்சென்றன. அதனல் தேவர், முனிவர், அந்தணர் முதலியோர் தமது கடன்களைச் செய்யாதொழிந்தனர்.

விதிமுறை தப்பியது அம்மையார் திருவிளையாட்டினுலே என்பதை இறைவர் திருவுளத்தடைத்தார். உலகம் நெறிதப்பிய பாவம் தீருதற்கு, உமையே! நீ சிவாகம விதிப்படி நம்மைப்பூசிப்பாயாக என்றருளினர். அம்மையார் சிவபூசைசெய்ய அமையம் வாய்த்ததே என எண்ணி, சுவாமியை வணங்கி, தேவரீரை வழிபடுதற்குரிய இடத்தை வகுத்தருள்வீர் என்று விண்ணப்பித்தார். பாலிநதி பாயும் தொண்டைநாட்டிலே காஞ்சி நகரில் ஒருமா மரநிழலில் நமது வடிவத்தைப்பூசிக்க என சுவாமி அம்மையாருக்குக் கட்டளையிட்டார். அவ்வாறே காஞ்சிசென்று (கண். 1—17) யானையை முயல் துரத்துமிடம், நிழல் சாயாக்காஞ்சி, செல்கின்றவரைப்பிறர் காணுவகை செய்யுமிடம், ஒருதாளில் மூன்று கமலம் மலரும் தடாகம், தூண்டாவிளக்கு, நோக்குவோருடைய நிழல் காணுக்கிணறு, கிழக்கிலிருந்து மேற்குத்திக்கிலே மிக்க நீரோடிப்பின் மறைந்துபோகும் நதிகளும், தேவருடன் அவ்விடத்தில் உண்டாகும் இன்பத்தைதரும் பிலத்துவாரமும், ஞானநெறியில் நிற்போர் விரும்பித்தீண்டினுல் செம்பொன் நிறமாக்கும் கல்லும், ஐயனுர் உலாவிவரும் வையாளிவீதியும், பகலில் மலரும் செங்குவளையும் இரவில் மலரும் தாமரையும் பொருந்த நடுப்பகலில் மலரும் பாதிரிமாமும், உட்புகுந்தோர்குரக்குருவத்தையடையும் பிலத்துவாரமும், அக்குரக்கினுருவத்தைமாற்றும் பொய்கையும், இயமனுல் இறவாத இடமும், இறந்தால் பிறவாத இடமும் ஆகிய அதிசயங்களையெல்லாம் பார்த்து (கண்-18—26) ப்பின்னர் கம்பாநதிக்கரையையடைந்தார். [பெரியபு-திருக்குறிப்பு: காஞ்சிப்புராணம்-விம்மித: பார்க்க.] அம்மையார் கம்பை மணலைக்குவித்துப் பூசித்தலும், நதியில் வெள்ளம் வரப்பண்ணி அம்மையார் வளைத்தழும்பும் நகிற்றழும்பும் தோன்ற இறைவர் வெளிப்பட்டருளுதலும், பங்குனித்திருநாளில் ஒருநாள் பூசைகொண்டு ஆயிரக்கால் மண்டபத்தில் வீற்றிருத்தலும் 52-வரைபேசப்பட்டுள்ளன. அலங்காரஞ்செய்த பின் கண்ணுடி பார்த்தல் 77-கண்ணிகள் வரையில் கூறப்படும்.

தேவார முதலிகள் திருவாசகச்செல்வர் முதலிய அடியார் களும், பூதகணங்களும், நாற்பத்தெண்ணாயிரவரும், நிபர்தக்காரும் உடன் வரத்திருநந்திதேவர் வேத்திரப்படைதாங்கிவரத் திருத்தேர் மேற்கொள்ளுதல் 102-கண்ணிகள்வரை கூறப்படுகின்றன. வாத்தி யங்கள் முழங்கப் பவனி வருதல், திருச்சின்னம் சேவித்தல்– 119 வரை; மால்பிரமர் முதலியோர் தத்தம் வாகனங்களில் வருதல், கங்கை, சத்தகன்னியர் உடன் வரல்—நிலமாதர்கள் வீதிகளிலும் கூடகோபுரம் நிலாமுற்றம் தெற்றிமறுகுகளிலும் நெருங்கியிருத்தல் முதலியன 153-வரை சொல்லப்படும். இறைவர் நீற்றுப்பவளக் கோலத்திருமேனியைக் கண்டோர் கூற்றுக்கள் – 185 வரை; வரு ணிக்கப்படும் இப்பகுதிகள் படிக்கப்படிக்கப் பெரிதும் சுவை தருவன. பேதைப் பருவப்பெண் கூற்றும், அன்னையர் அணைத்தாற்றுதலும். 215- கண்ணிவரையுள்ளன. பெதும்பைப்பருவவருணனை 229- வரையில் சிறக்கக்கூறுவர். பின்பு, இறைவர் அருளிச்செயல்களை 253 வரை வருணிப்பர். பெதும்பைப்பருவத்தாள் காமுறுதலை அதன்பின் பேசுகின்றார். 266 முதல் 310 கண்ணிகள்வரை மங்கைப்பருவவருணனையும் செயலும் கூறப்படும். 311 முதல் மடந்தைப்பருவமும், அவர் முன் இறைவன் காட்சி தருதலும், பெண்கள் காமுறுதலும், தாயர் சைத்தியோபசாரம் செய்தலும், அவள் இரங்கலும் சொல்லப்பட்டுள்ளன. 357 ஆம் கண்ணி முதல் அரிவைப்பருவ வருணனை; இப்பருவத்திலே இறைவரைக் குழைவிக் கத்தக்க செய்திகளையெல்லாம் சொல்லித் தன் கைக்கிள்ளைக்குத் தூதுபோகச் சொல்லியபின், இறைவர் வரத் தொழுது, மாலாகி, அவள் இரங்கிக்கூறும் இரக்கவுரைகள் எவர் மனத்தையும் உருக்கு வன. தெரிவைப்பருவம்405ஆம் கண்ணியிலிருந்து தொடங்குகிறது. 416 வரையில் அப்பருவம் வருணிக்கப்படும். பிறகு விறலிவந்து அவளைக்கண்டு புகழ்தல்- இறைவரது தசாங்கத்தைப் பாட விறலி யைத் தெரிவை தூண்டுதல் – அவள் தசாங்கம் பாடல் – தெரிவை அதனைக்கேட்டு மாலாதல் – தோழியிடம் கூறல் முதலியன 465–

கண்ணிகள்வரை பேசப்பட்டுள்ளன. இனி, முடிவு வரை பேரிளம் பெண் வருணனை சிவபரத்துவம் மிக்க இன்பந்தந்து சுவைபயக்கும். உடையான் போந்தான் உலா என முற்றும்.

இனி, இப்பிரபந்தங்களின் ஆராய்ச்சிக்கு இவ்வாதீனத்துக் கல்விக்களஞ்சியமாகிய 'சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் உள்ள ஏட்டுச்சுவடிகளும், இவ்வாதீன வித்துவசிரோமணி—சபாபதிநாவலரவர்கள் மருகரும் மாணவரும் ஆகிய சிவப்பிரகாச பண்டிதர் 1883ல் அச்சிட்ட ஆமாத்தூர்க் கலம்பகமும்; திருமயிலை சே. வெ. ஜெம்புலிங்கம் பிள்ளையவர்கள் விகிர்தி—மாசியில் அச்சிட்ட ஷெ பிரதியும், சென்னை—பிரமநகர் முருகேச முதலியார் 1897-ல் அச்சிட்ட தில்லைக்கலம்பகமும் ஆலாலசுந்தரம் பிள்ளையவர்கள் காஞ்சிப்புராண வுரையுடன் சேர்த்து விகாரி (1897) ஆண்டில் அச்சிட்ட ஏகாம்பரநாதருலாவும் பெரிதும் துணை செய்தன. புதுவை—அருணசலக்குருக்கள் முன்பு அச்சிட்டதாக வுள்ள தில்லைக்கலம்பகம் கிடைக்கவில்லை.

இனி, இவ்வாதீனத்திலே இப்பொழுது இருபத்தொன்றாவது குருமஹா சந்நிதானமாக வீற்றிருந்து, சிவஞானதான வள்ளலாகச் சித்தாந்த சைவநூல்களையும் செந்தமிழ் நூல்களையும் அச்சிட்டு வழங்கி, சிவக்ஷேத்திர குருக்ஷேத்திர பரிபாலனம் வித்தியா பரிபாலனம் செய்து விளங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக மூர்த்திகள் கருணை முன்னின்று பாதுகாப்பதாக எனச்சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன். குற்றம் பொறுத்தருளுக.

இங்ஙனம்,
சித்தாந்தசைவமணி—

21—8—53.

த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,
திருவாவடுதுறையாதீனவித்துவான்.

## விடுபட்டவை.

.................................. —இணையிலிமுன்

372 மேவு புளகமுடன் வெண்ணீறு மெய்க்கணிந்து
தேவி யிருந்த செயல்பாரீர்—பூவிற்

373 கரந்து மழைபொழியாக் காலத்தே கம்பை
பரந்து வரும்பெருக்கைப் பாரீர்—விரிந்தபுனல்

374 மாகம்புதைய .......................................
.........என மேலே தொடர்ந்துகணக்கிட்டுக் கொள்க



"மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை
ஆணிப்பொற் கூத்தனை யாரறி வாரே."

— திருமூலதேவர்.

## நூலாசிரியர் வரலாறு.

சோழநாட்டிலே ஆடுதுறைக்குத் தென்பால் நான்கு கல் தொலைவில் உள்ள **இலந்துறை** என்னும் ஊரிலே செங்குந்தர் மரபிலே இரட்டையர் தோன்றினர். அவ்விருவரும் உறவின் முறையால் அம்மான் மகனும், அத்தை மகனுமாயினர். இளமைப்பிராயத்திலேயே அவர்கள் பெற்றோரை இழந்தனர். இரட்டையரும் பிறப்பிலேயே அங்கக் குறைவுடையவர்கள். ஒருவர் குருடர், ஒருவர் முடவர். ஆயினும், இருவரும் 'ஈருடம்புக்கு ஒருயிர்போல' மனமொத்து வாழ்வாராயினர். முடவர் தோளிலேறிக்கொள்ள குருடர் அவரைச் சுமந்து செல்வர். முடவர் குருடருக்குக் கண்ணாகவும், குருடர் முடவருக்குக் காலாகவும் விளங்கினர். 'எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்' என்னும் பழமொழிக்கு இலக்காக இரட்டையர் இருந்தனர். முன்னைப் பல பிறவிகளில் ஈட்டிய புண்ணியத்தின் பயனாகச் சிவபத்திச் செல்வமிக்கு ஈடுமெடுப்புமின்றிச் சிவதல யாத்திரையிலும் பெருவிருப்புக் கொண்டனர். அங்கங்கே சென்று சிவதரிசனம் செய்து சிவபிரானைப்பாடி மகிழ்வர். பெரும்பாலும் 'அம்மானையே' பாடியுள்ளனர் போலும். கண்கள் பெற்ற பயனை முடவரும், கால்கள் பெற்ற பயனைக் குருடரும் எளிதில் அடைந்தனர். அங்கமெலாம்பங்கமிலாமற்பெற்றும் ஆலய வழிபாட்டிற் சிந்தையின்றி அலைந்து திரியும் நம்மனோருக்கு அவரிருவரும் ஆசிரியராயிருந்து ஆலய வழிபாட்டின் இன்றியமையாமையை அறிவிப்பார் போன்று விளங்கினர். 'கால்களாற் பெற்ற பயன் கறைக்கண்டன் கோயிலை வலம் வருதலாம்' என்பதை யறிந்து வைத்தும் முற்பிறவிகளில் அது செய்யாதார் முடவராவார் எனவும், 'கண்களாற்

பெற்ற பயன் காளகண்டன் உருவத் திருமேனியையும் அவனடியார் திருவேடப்பொலிவையுங் கண்டு மகிழ்தலே' என்பதை மறந்து வாளா திரிவோர் கண்ணிழந்து குருடராய்ப் பிறப்பார் எனவும் யாமெல்லாம் அறிந்து உய்ய வழிகாட்டுவாதைப் போல இருந்தது அவர்தம் செயல். ஊர்தோறும் சென்று இதனையே உபதேசிப்பார் போன்றது அவர்களுடைய சிவதலயாத்திரை. ஒருவர் புறக்கண் குருடேயன்றி அகக்கண்ணுற் குருடரல்லர். மற்றவர் புறத்துறுப்பு முடமேயன்றி அறிவு முடம்பட்டிலர். ஆகலின், இருவரும் அறிவுவடிவாகிய இறைவரை அல்லும் பகலும் அனவரதமும் சிந்தை செய்து அன்பினல் வழிபடுவாராயினர்.

"கால்களாற் பயனென்– கறைக்கண்டனுறை கோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக்கால்களாற்பயனேன்.,,

"கண்காள் காண்மின்களோ—கடல் நஞ்சுண்ட கண்டன்
றன்னை, எண்டோள்வீசிநின்றுடும்பிரான்தன்னைக்கண்காள்
காண்மின்களோ." —திருநாவு.

"கண்ணுடைய ரென்போர் கற்ருேர் முகத்திரண்டு— புண்ணுடையர் கல்லா தவர்" எனவும், "ஒருமைக்கட் டான் கற்ற கல்வி யொருவற்(கு)—எழுமையும் ஏமாப் புடைத்து" எனவும் திருவள்ளுவநாயனர் அருளிய திருக்குறட்பாக்கள் இவர்கட்கு ஏற்புடைத்தாயின "கற்றதனற் பயனென் கொல் வாலறிவன்—நற்ருள் தொழாஅ ரெனின்" என்னும் குறட்பாவை நன்குணர்ந்தவர் என்பதை அவர்கள் செயல் நன்குணர்த்துவனவாம். கருவிலே திருவுடையராகிய இரட்டையர் புலமைத்திறமும் பெரிதுடையர். இங்கே திரு வென்றது அருட்டிருவையேயாம்; பொருட்டிருவை யன்று. இவ்விருவரும் முதுசூரியர் இளஞ்சூரியர் எனவும் வழங்கப்

பட்டனர். 'தவமுந்தவமுடையார்க்கேயாம்' எனவும், 'ஒன்றற்குச் செய்த தவம் பிறிதொன்றற்கு ஆகாது' எனவும் ஆன்றோர் கூறும் பொருண்மொழி இவர்கள்பால் நன்கு சித்தித்தது. பெருஞ்செல்வம்பெற அருந்தவம் செய்தோரில் அதனைத் துய்க்குந் தவஞ்செய்தோர் மிகச்சிலரே என்பதை நாம் அநுபவத்திலே காண்கின்றோம் அன்றோ!

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"

என்னும் திருக்குறள் இதனை வலியுறுத்தும். எனவே, அருட்செல்வமும் கல்விச்செல்வமும் பெரிதும் பெற்ற இரட்டையர் பொருட்செல்வம் ஒரு சிறிதுமின்றி வறுமையால் வாடிவருந்தினர். அதனால், சில சமயங்களில் புரவலரைத் தேடிப்பாடிச் சென்றனர். "பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" என்ற சமயகுரவர் திருவாக்கு இடையிடையே நினைவில் வந்து இவர்கட்கு அப்புன்மைத்தொழிலைத் தவிர்க்கும். பசிப்பிணி இடை இடையே வாட்ட அவர் என்ன செய்வார்? பாவம்! பசிவந்திடப் பத்தும் பறந்துபோமன்றோ!! இவர்கள் நிலைமையும் புலமையையும் அறிந்தோர் பலர் உதவிசெய்தனர். புரவலர் பலர் இவர்களை உபசரித்துப் பாதுகாத்தனர். அலட்சியம் செய்து அவமதித்த மக்களும் பலரே. அவ்வவ்வமையங்களில் இரட்டையர் பாடிய செய்யுட்கள் இவைகளை நன்கு உணர்த்துவனவாம். வில்லிபுத்தூர் ஆழ்வாரைக் கொண்டு பாரதத்தைச் செய்வித்த வக்கபாகை வரபதியாட்கொண்டானால் இவர்கள் பெரிதும் அபிமானிக்கப்பெற்றனர். சமணப் புலவனாகிய திருவண்ணாமலைச் சம்பந்தாண்டான் என்பவன் 'மன்' என்றெடுத்து 'மனுக்கு' என்று வெண்

பாவில் முடிக்கச் சொன்ன சமுத்திபைப் பூர்த்தி செய்தார் இவர். திருவாமாத்தூரில் ஆறு விலகப் பாடிப் புகழ்படைத்தார். திருவாரூரிலே வன்மீகநாதரைத் தரிசித்து இவர்கள் வழக்கம்போலச் செய்யுள் பாடத்தொடங்கி இரண்டாம் அடி எடுக்க வாராமல் மயங்க, அப்போது அங்கே தரிசனம் செய்திருந்த காளமேகப்புலவர் '.பாணந்தான் மண்டின்ற பாணமே' என்று எடுத்துக் கொடுக்க இவ் இரட்டையர் அவ்வெண்பாவை முற்றுவித்தனர் என்ப. பின்னொருகால் ஆனைக்காச் செல்வரை வழிபாடு செய்ய இரட்டையர் அங்கே வந்தபோது ஈமத்திலே காளமேகப்புலவ ருடம்பு வேகக் கேட்ட அவர்கள் பதறி "வேகின்றதையையோ — மண்டின்ற பாணமென்ற வாய்" என்றிறுதி பாடிய கையறுநிலைச் செய்யுள் எவர் நெஞ்சையுருகச் செய்யாது.

இனி, இரட்டையர் திருவாமாத்தூர்க்கலம்பகத்தைப் பாடி அரங்கேற்றினர். 61-ஆம் பாடல் அரங்கேற்றும்போது பம்பையாற்றுக்குக் கீழ்கரையில் கோயில் கொண்ட சிவபெருமானைப் 'பம்பை மேற்கரைக்கோயில் கொண்டார்' எனப் புலவர்கள் பாடியிருப்பதைக் கேட்ட சபையோர் 'பாடியவருக்குக் கண்ணுங்காலும் இல்லாமற் போயினும் கேட்போருக்கு அவையில்லாமற் போகவில்லை எனஅசதியாடி எழுந்து சென்றனர் என்றும், அங்ஙனம்சென்றவர் பொழுது விடிந்ததும் ஆற்றங்கரைக்கு வந்து பார்க்க அன்றிரவில் உண்டான பெருவெள்ளத்தில் ஆற்றின் கதி முற்றும் மாறி மேற்கரைக்கோயிலாகவே காட்சியளிக்கக் கண்டு முன்னிரவில் கேட்ட புலவர் வாக்கின் தூய்மைக்கு வியப்பும் அச்சமும் அடைந்து அவரை யாவரும் போற்றிப் புகழலாயினர் என்றும் சரித்திரம் வழங்குகிறது. தமிழ் நாவலர் சரிதையில்

'ஆறுவிலகியபாட்டு' என்று காணப்படும் தலைக்குறிப்பும் காண்க என்பர் பெருந்தொகைத்தொகுப்பாசிரியர்.

இனி, ஏகாம்பரநாதர் உலாவைப்பாடி அரங்கேற்றுங் காலத்துக் காப்புச்செய்யுளிற்கண்ட ஆயிரக்கால் மண்டபமும், விகடசக்கர விநாயகரும் அங்கு இல்லாமையால் சபையோர் அதனை மறுத்தனர் 'இவைகளைக் கண்டன்றி நூல் அரங்கேற்றுவதில்லை' என உறுதிபூண்ட இரட்டையர்சிவதல யாத்திரைக்குச் செல்வாராயினர். பின்பு, சில நாட்களில் ஏதோ திருப்பணி செய்ய எண்ணிச் சிலர் பூமியை வெட்ட அங்கே மண்ணால் மூடப்பட்டுக்கிடந்த மண்டபமும் விநாயக மூர்த்தியும் தோன்றக்கண்டு, அவ்வூரார் வியந்து, மீண்டும் இரட்டையர்பாற் சென்று, குறையிரந்துவேண்டி அழைத்து வந்து, நூலை அரங்கேற்றச்செய்து சிறப்புச்செய்தனர் என்பர். ஏகாம்பரநாதருலா தெய்வீகவுலா எனவும் பெயர் பெறும்.

இனி, இவர்கள் பாடிய ஏகாம்பரநாதர் உலாவிலே 61,102, 146, 151 ஆம் கண்ணிகளால் பாராட்டப் பெறுபவன் 'ஏகாம்பர சம்புவராயன்' என்பவன். அவன் கி.பி. 1337 — 1360 வரை காஞ்சீபுரத்தையாண்டுவந்த சகல லோக சக்கரவர்த்தி இராஜ நாராயண சம்புவராயன் காலத்தில் இருந்தவன் எனக் கல்வெட்டு ஆராய்ச்சிகளால் தெரிகின்றது. (Ep. Rep- No. 390 of 1905)

இவர்கள் காலத்துப் புலவர்களில் காளமேகப்புலவர், அதிமதுரகவி, சம்பந்தாண்டான், அருணகிரிநாதர், வில்லி

புத்நூரார், வரந்தருவார் முதலியோர் சிறந்து விளங்கியோ ராவார். இரட்டையர்காலம் பதினைன்காம் நூற்றாண்டு என்பர்

பெருங்கதை, தொண்டைமண்டலசதகம், சோழமண் டல சதகம்,சிதம்பரம் முதலியன இவ்வரலாறு எழுதத்துணை செய்தன தொண்டைமண்டல சதகப் பதிப்பாசிரியர் எழுதி யுள்ள விரிவான வரலாறு என் கைக்குக்கிட்டவில்லை. இரட்டையர் வரலாற்றின் விரிவையும் பிறவற்றையும் அதன் கண் பரக்கக் காணலாம்.

---

### கவிராக்ஷஸ — ஸ்ரீ கச்சியப்பமுனிவார்.

இல்லை யானமக் கென்று வெறுக்கைமிக்
கெய்தி னர்களை யெண்ணி யிரங்கிநீ
அல்ல விற்றுளை கின்றனை நெஞ்சமே
அவர்க ளோபண்டை நல்வினை யாற்றினர்
செல்ல லாம்வகை தீவினை முன்புநீ
செய்தொ ழிந்தனை தெய்வதக் காஞ்சியின்
மல்ல லானந்த ருத்திரே சத்தனை
வழுத்து மேலை வளத்தினை யாவையே.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தில்லைக்கலம்பகம்.

---

## காப்பு.

கற்பக விநாயகர்.

நேரிசைவெண்பா.

அல்லைப் பொருவு மணிமிடற்றெம் மையனுறை
தில்லைக் கலம்பகத்தைச் செப்பவே - யொல்லையிலே
கற்பகமுன் சத்திவிடுங் கந்தனுக்கு முன்பிறந்த
கற்பகமால் யானையருள் காப்பு.

## நூல்.

### நேரிசை யொத்தாழிசைக்கலிப்பா.

சீர்கொண்ட மன்றமென்றுந் திருச்சிற்றம் பலமென்றும்
ஏர்கொண்டபொழிற்றில்லையெழிற்பொன்னம்பலமென்றும்
வார்கொண்ட முலையுமையாள் வாழ்பேரம் பலமென்றும்
பேர்கொண்ட கனகசபைப் பெரும்பற்றப் புலியூரோய் !

இது தரவு.

பூலோக முதலாய புவனங்க ளளிப்பதுவுஞ்
சாலோகந் தருவதுநின் சரணார விந்தமன்றே.

பூமீது வலஞ்செய்து புகழ்ந்தோது மடியவர்க்குச்
சாமீப மளிப்பதுநின் றாட்கமல மலரன்றே.

நீரூருஞ் சடைமௌலி நிலவெறிப்ப மறைபொலிப்பச்
சாரூபந் தருவதுநின் றாமரைப்பூஞ் சரணன்றே.

இவை மூன்றுந்தாழிசை.

அதனால், (இது தனிச்சொல்)

அலம்புநீர் மூழ்கியு மஞ்செழுத்து நவின்றும்
பொலம்புனை நறுமலர் புனைந்துஞ்
சிலம்படி பரவுதுஞ் செனனமறற் பொருட்டே.

இது சுரிதகம். (1)

### நேரிசைவெண்பா.

பொருள்வடிவாய் நின்ற புனிதா கயவர்க்
கிருள்வடிவாய் நின்ற விறைவா — வருள்வடிவ
மானவா நின்றா ளவாவென் றறிந் துதில்லை
வானவா நின்றா ளவா. (2)

## கட்டளைக்கலித்துறை.

வாசவ னந்தி மதிகதிர் வானவர் மாமலரோன்
கேசவ னந்திக் கணபதி வேலவன் கெங்கையுமை
நேசவ னந்தி யனந்தன் பரவிடு நீலமிடற்
றீசவ னந்திகழ் தென்புலி யூரவென் றேத்துமினே. (3)

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மின்னொன்று வான மதியொன்று வேணி
விடையொன் றிருந்த கொடியார்
மன்னொன்று சோதி நடமொன்று தில்லை
மணிமன்றின் முன்றி லிடையே
பொன்னொன்று மேனி யரவொன்று நீடு
புலியொன்று நின்ற வதனால்
என்னொன்று பேதை தொழுவான் றுணிந்து
மெழுவாண் மடந்தை யிவளே. (4)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இவளைக்கண் டனைவோரு மிரங்குகின்றார் பொழுதுபுகு
மிடத்திற் பாய்ந்த
தவளைக்கண் டனைமறைத்துந் தாமரையி னிதழ்குவியுந்
தடஞ்சூழ் தில்லைக்
குவளைக்கண் டனைக்கண்டு மாயவனாண் முன்கையினிற்
குழவி வைத்த
அவளைக்கண் டனைக்கண்ட வன்றுமுதல் குடியிருப்ப
தருமை தானே. (5)

ஷை வேறு.

அருமை யாகிய பசுபதி யம்பலத் தாடிதென் புலியூரின்
உரிமை யாகிய காளையைக் கண்டபி னுயிர்வரு மல்லாமல்
கருமை யாகிய கன்றிழந் திருப்பவள் காலனர் பகட்டின்பின்
எருமை போனபி னிவளுயிர் மீளுமோ வேழைமை
மடவீரே. (6)

கட்டளைக்கலித்துறை.

மடலூர் வதுமறுத் தியான்செய்த நன்றி மறந்தொழிந்தீர்
அடலூர் பகையெனி லாற்றுங் கொலோமுன் றிலார்த்தசங்கந்
திடலூர் வளவயற் றென்புலி யூர்தென்ற றில்லைச்சுற்றுக்
கடலூர் மரக்கலக் காகமன் றோவஞ்சி காதலர்க்கே. (7)

நேரிசைவெண்பா,

காதி லிரண்டுபேர் கண்டோ ரிரண்டுபேர்
ஏதிலராய்க் காணு ரிரண்டுபேர் — பேதைமுலை
யுண்ணு ரிரண்டுபே ரோங்குபுலி யூராருக்குப்
பெண்ணுன பேரிரண்டு பேர். (8)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பேரம்பலவனைநினையும்பொழுதொருபிறையுஞ்சடைமுடியுஞ்
சேரும் பலபல பவனந் தருவது திருவம் பலமன்றோ
தாரம் பலவனை தமர்தந் தையரொடு சரணம் புகவெளிதா
நீரம் பலவனை நினையன் பிலையெனி னிரயம்பல பலவே. (9)

ஷை வேறு.

பலகோடி மலரன்றி மலரொன்று புனைந்துலகம்
படைத்தான் வேதன்

மலர்கோடி யருகிப்ப வொருமலரால் விண்புரந்தான்
வச்ர பாணி
உலகோடி வணங்குதில்லை யம்பலவர் திருவடியி
லொருகண் சாத்தி
அலர்கோடி புனைந்திடுமுன் சக்கரம்பெற் றுனாழி
யரங்கத் தானே. (10)

அறுசீர்ச்சந்தவிருத்தம்.

அரங்கச்சிற் சபையார் மடந்தைக்குப் பிரியா
ரலங்கற்பொற் சடையாளர்
விரிஞ்சற்குத் துயில்கூர் முகுந்தற்குத் துரையாம்
விடங்கற்குப் பதியாமால்
மருங்குற்றுக் கயல்சேல் கரும்புக்குட் புகவே
வரும்பெற்றிச் சினவாளை
பெருங்கப்பற் கடன்மீ னுடன்றத்திக் கரைசேர்
பெரும்பற்றப் புலியூரே. (11)

நேரிசைவெண்பா.

புலியூ ருறையும் புனிதா புகுவெண்
பலியூர் தொறுமிரக்கும் பண்பா – பொலிகயிலைக்
கல்லி லிருக்கக் கடனோ லெங்நெஞ்சக்
கல்லி லிருக்கக் கடன். (12)

புயவகுப்பு.

கல்லினுங் கடிதாக விறுகத்திரண்டன
கைவிலங் குயிர்மாள வெதிரிட்டுவென்றன
கல்வியங் தணரேவு மழுவைத்திருந்தன
கையில்வெண் டலையோடு திகழப்பொலிந்தன

வில்லெனும் படிமேரு கிரியைப்புரந்தன
மெய்பருந் தவர்கோவை யெழுதிச்சிவந்தன
வெய்யவன் குருடாக விழியைப்பிடுங்கின
வில்லமுங் கழுநீரு நிறையக்கிடந்தன
வல்லிபங் தலைசாய வுரியைக்கவர்ந்தன
வைகைமண் கரைமீது குவியச்சொரிந்தன
மல்குமைந் தலைநாக மணியிட்டணிந்தன
வைபகந் தருவோனை முடியைக்களைந்தன
செல்விநஞ் சிவகாமி தழுவக்குழைந்தன
தெய்வவெண் டிருநீறு துதையப்புனைந்தன
தெள்ளுசெந் தமிழ்மூவர் கவியைச்சுமந்தன
தில்லையம் பலவாணர் கனகப்புயங்களே. (13)

கலிவிருத்தம்.

புயங்க மாலை புனைபுலி யூரினன்
வயங்க மாலை மதியணி வேணியான்
முயங்க மாலை முராரியை வேட்டவன்
உயங்க மாலை யுதவினன் வஞ்சியே. (14)

கட்டளைக்கலித்துறை.

வஞ்ச மனத்தைச் சிதம்பரத் தாக்கிய வல்லமையைக்
கஞ்ச மனத்தை யுயர்த்தோன் வியந்தனன் கைபிசைந்தான்
வெஞ்ச மனத்தை யறிந்தபின் னீரினி விட்டுவிடீர்
கொஞ்ச மனத்தை யொருபாகம் வைத்த குணக்குன்றமே.
(15)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

குன்றுளோ னென்னுந் தெய்வக் குறுமுனி வணங்குந்தில்லை
மன்றுளோர் நடனங் காண வஞ்சரைக் கண்டா லஞ்சேன்
தென்றலோ டிகலுஞ் சேவல் சிறையின லணைத்த பேடை
அன்றிலோ வென்னு மோசைக் கஞ்சுமென் னெஞ்சந் தானே.
(16)

## கடைமடக்கு. (கட்டளைக்கலிப்பா)

அஞ்சு மேயுடன் கானக மொன்றுமே
யரக்க னைப்பொருங் கானக மொன்றுமே
கஞ்சன் மாறெழு மன்ற வரங்கமே
கைலை மாலையு மன்ற வரங்கமே
வஞ்ச மான பரசிவ கங்கையே
மன்னு தீர்த்தம் பரசிவ கங்கையே
நெஞ்ச மேநீ சிதம்பரந் தில்லையே
நித்த மோது சிதம்பரந் தில்லையே. (17)

தில்லைமூ வாயிரவர் பூசைபுரி பாதந்
தேவருட னேயிருவர் தேடரிய பாதம்
வல்லமா காளியொடு வாதுபுரி பாத
மாமுனிவற் காயமனை மார்பிலுதை பாதஞ்
சொல்லவே பரவையிடந் தூதுசென்ற பாதந்
தொல்புலிப தஞ்சலியுந் தொண்டுசெயும் பாத
மல்லலா மேழ்பிறவி தீரநட மாடு
மாதிபுலி யூரர்திரு வம்பலவர் பாதம். (18)

பவபுரத்தை யகல்வரந்தப் புரத்தை யாள்வர்
பரமபுரத் தணிவர்நிதி படைத்து வாழ்வர்
சிவபுரத்தில் வீற்றிருப்ப ரெம்மை யாளச்
சிதம்பரத்திற் றிருநடத்தைத் தெரிசித் தோரே. (25)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தெரிசிக்க முத்திதரு நித்த ரத்தர்
சிகரப் புயத்தர் புலியூரில்
இருவர்க்கு நிர்த்தமிடு சிற்ச பைக்கு
ளிறைபொற் பதத்தை மறவாமல்
பரிசிக்க முத்தி வசனிக்க முத்தி
பணிதற்கு முத்தி மலராலே
மருசிக்க முத்தி பிரதக் கிணத்தில்
வருதற்கு முத்தி தருவாரே. (26)

நேரிசைவெண்பா.

தருத்தாவு பூஞ்சோலைச் சங்கரா தில்லை
நிருத்தா வுருகாதென் னெஞ்சம் — பருத்தமர
மேவம் பழுத்த விடைவெளிறில் லாவயிரம்
பாவம் பழுத்த பழம். (27)

கட்டளைக்கலித்துறை.

பழுத்துச்செத் தாலும் பிறந்துசெத்
தாலுமிப் பாழுடலங்
கொழுத்துச்செத் தாலு மெலிந்துசெத்
தாலுங் கொலைப்படினும்

புழுத்துச்செத் தாலும் புதைத்தாலுங்
காலிற் புரிபைக்கட்டி
யிழுத்துச்செத் தாலுஞ் சிதம்பரத்
தேசென் றிறத்தனன்றே. (28)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நன்றென மகிழ்ந்தொரு சிதம்பர நடம்புரியு
நம்பர் பரனர்
குன்றென வுயர்ந்தவர் விரும்பிய பெரும்பதி
குடந்தை கடவூர்
தென்குடி வலஞ்சுழி புறம்பிய மெறும்பிமலை
செம்பிய னல்லூர்
அன்பில்புற வம்பழனம் வஞ்சிகள மிஞ்சிகுடி
யம்ப னகரே. (29)

## மடக்கு.

பதினறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அம்பு லிக்கொரு நட்டம் புரிந்தவ
ரம்பு லிக்கொரு நட்டம் புரிந்திலார்
ஆழி யுஞ்சங்கு மாலுக் களித்தவ
ராழி யுஞ்சங்கு மாலுக் களித்திலார்
வம்பு லாவு மிதழியை வேட்டவர்
வந்து செய்ய விதழியை வேட்டிலார்
மானை யுங்கைப் பிடித்தே நடத்தினர்
மானை யுங்கைப் பிடித்தே நடத்திலார்
பம்பு வேலை விடமிட ருக்கினர்
பாவை யாசை விடமிட ருக்கிலார்

பரவை கோபமுஞ் சோபமுந் தீர்த்தவர்
பரவை கோபமுஞ் சோபமுந் தீர்த்திலார்
செம்பொன் மாளிகை யம்பலக் கூத்தனார்
தினமு மெங்களை யம்பலத் தேற்றினார்
தில்லை யம்பதி வாழ்நட ராசனார்
திருவு ளச்செய வன்றாயி ருந்ததே. (30)

களி

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இரும்பெண்ணை விரும்பாதா ரெவருளர்கட்
குடிமாறா திருந்தான் வேதன்
வரும்பெண்ணை யகன்றபின்னெண் ணறவருந்தி
னான்முகுந்தன் மாலு மானான்
சுரும்புண்ணு மதுமுடியும் பசுந்தோடும்
பூமடலுஞ் சுமந்து தோன்றிக்
கரும்பெண்ணை நீங்காம லுடனிருந்தான்
கனகசபைக் கடவு டானே. (31)

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடல்விட நுகர்ந்த காசினி யிலிங்கங்
காஞ்சிமா நகருறை யிலிங்கம்
காவிரி வடபால் வருதிரு வானைக்
காவினி லப்புலிங் கமதாம்
வடதிசை யண்ணா மலையினி லிங்கம்
வன்னியின் வடிவுகா ளத்தி
வாயுலிங் கமதாஞ் சிதம்பர லிங்க
மாசிலா காயலிங் கமதாம்

குடதிசை யதனின் மருவுகுற் றாலங்
கோதறு சித்திர சபையாம்
குற்றமில் குணக்கிற் பழையனூர் மன்றங்
குலநவ ரத்னமன் றென்பார்
அடல்விடைப் பாக னெல்லையம் பதியி
லம்பலந் தாம்பிர சபையாம்
ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமா
மணிதில்லை செம்பொனம் பலமே. (32)

குறளடி வஞ்சித்துறை.

அம்பலவர் தாளே — நம்பர்பத தூளே
தம்பமென தாளே — வம்பர்மத வேளே. (33)

நேரிசைவெண்பா.

வேலை யிடுதுரும்பாய் வெம்பினே னம்பலவர்
மாலை யெனக்குதவ மாட்டாயேற் — சோலையினிற்
போதந்த தும்பியே புன்கணீர் போலெனது
போதந்த தும்பியே போம். (34)

கட்டளைக்கலித்துறை.

போதத்தை விட்டவர்க் காளாகி வேள்வி புரிந்ததக்கன்
வேதத்தை விட்டவர் வேந்தா யிருப்பர்வில் வேளிருந்து
மாதத்தை விட்டவ ரம்பல வாணர் மலர்க்கமலப்
பாதத்தை விட்டவ ரூரூர்த் திரிவர் பலிக்குழன்றே. (35)

வெள்ளை விருத்தம்.

பலியூருங் கன்மனத்தார் பழிநாணு றென்செய்கேன்
பரவாய் வாழி

புலியூரர் கழிக்கானற் புலம்பரொடு மறந்தனையோ
புணரீ வாழி
கலியூர்தி யுடன்சென்றார் கடுந்திண்டேர் வழிசிதையேல்
கடலே வாழி
வலியூரு மலர்க்கணைக்கென் னுயிரிலக்கம் புரிந்திடேல்
வாரீ வாழி. (36)

## இடைச்சியார்.

வானிச்சி யார்வணங்கு மம்பலவர் தென்புலியூர்
மணிவீ திக்கே
கோனிச்சி யார்தயிர்பால் விலைகூறி விற்றுவருங்
குரலைக் கேட்டாற்
றேனிச்சி யார்கரும்பு தனையிச்சி யாரிவரைத்
தெரிசித் தோர்கள்
ஏனிச்சி யார்மதவே ளிரதிபைக்கண் டாலுமவ
ரிச்சி யாரே. (37)

## கலிவிருத்தம்.

இச்சைபடி யார்பரவு மேமசபை வாணர்
பொற்சடிலர் நீலமணி கண்டர்புலி யூரர்
பச்சையொரு பாதியுடல் பால்வடிவ மானார்
செச்சைமல ரேயனைய சேவடிக ளாரே. (38)

## கார்காலம்

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சேவணியு மணியோசைக் கிடையநின்று
விழிதூங்கத் தில்லை மன்றிற்
கோவணியுங் கொன்றையெனப் பசலைபெழ
வன்பர்மனங் குறியாக் காலம்

பூவணிக வேளாளர் புவியரசர்
கொடுங்கோன்மை பொறுத்தாற் போல
ஆவணியும் புரட்டாசி மாதமுநான்
றனியிருந்திங் காற்றி லேனே. (39)

ஆற்றிலிடும் பொருள்குளத்தி லழைப்பித்த
திருக்கதையு மாரூ ரர்க்குச்
சேற்றுவயற் புகலூரிற் செங்கலைப்பொன்
னாக்கியதுந் திருந்தக் சொன்னார்
நேற்றிரவி னெனைப்புகழ்ந்தா ரின்றறிந்தேன்
பொருடேட நினைந்த தெல்லாம்
போற்றுதிரு வம்பலவர் பொறுப்பரெனைப்
புகழ்ந்ததெல்லாம் பொய்மெய் தானே. (40)

பொய்ப்பசிக்கோண் டிரந்துழலும் புலியூரர்
செஞ்சடைமேற் பொலிந்து வாழும்
மைப்பசியி லிழப்பறந்த நெடுமூச்சு
விடுவதுபோல் வாடை வீச
மெய்ப்பசியு மருந்துயிலுந் தவிர்ந்துபெருந்
தவம்புரியும் விரதர் போல
ஐப்பசியுங் கார்த்திகையும் பிரிந்திருந்து
மொருவகைநா னாற்றி னேனே. (41)

வேறு.

ஆற்றுநீர் மலையில்விழு மருவிநீர்
பூஞ்சுனைநீ ரகழுங் கூவல்
ஊற்றுநீர் குளத்துநீ ருததிநீர்
மேகத்தி லுள்ள நன்னீர்

வேற்றுநீர் விரிசடையோன் கங்கைநீ
ரித்தனைக்கு மேலாங் கண்டீர்
காற்றுநீ ருரிவைபரம் பலத்தாடு
மையர்சிவ கங்கை நீரே. (42)

வேறு.

நீர்கழிக்குஞ் சடைமுடியா ரம்பலவர்
தென்புலியூர் நியம வீதி
தேர்கழிக்குந் திருநாளு மறந்தார்தாஞ்
சென்றிருக்குந் திசையுங் காணேன்
கூர்கழிக்கும் வாளினுக்கு மிலக்கான
புண்ணாற்றிக் கொள்வார் போல
மார்கழிக்குந் தைக்குமிருந் தாற்றினேன்
முன்பனியை மாற்றி னேனே. (43)

நேரிசைவெண்பா.

மாற்றா யிதழியந்தார் வாங்கிவந்து வஞ்சிதுயர்
ஆற்றா யுன்வளர்த்த வாயிழையைத் – தேற்றாயேல்
அஞ்சுகமே யஞ்சின ளம்பலவ ரைப்பிரிந்தா
லஞ்சுகமே யஞ்சின ளாம். (44)

கட்டளைக்கலித்துறை.

அஞ்சத் தனையு மயிலோனை யும்பெற்ற வம்பலனை
வஞ்சத் தனையு மனத்திலெண் ணாதவர் மால்பிரமன்
எஞ்சத் தனையு மறைந்துநின் றானுக் கிணையென்னவே
கஞ்சத் தனையுந் திருமாலை யுஞ்சொல்வர் காசினிக்கே. (45)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காசிக்குஞ் சேதுவிற்குந் தலைவர்திரு வம்பலவர்
கமல பாதம்
பூசிக்கு மடியவரைத் தெரிசிக்கு மெனைமதனன்
போர்வல் லானே
ஊசிக்கு நிகரான வைங்கணைக்குந் தென்றலுக்கு
முறுவா டைக்கும்
மாசிக்கும் பங்குனிக்கு முன்புவரும் பின்பனிக்கு
வருந்தி லேனே. (46)

வேற்றொலி வெண்டுறை.

வருகடலில் விடமுண்டார் மன்னியதென் புலியூரிற்
குருகடரு நெடுங்கொல்லிக் குன்றநா டுடையீர்
முருகடரு மலர்க்காந்தள் வெற்பிலே மலருகின்ற
முறைமை யின்றிப்
பொருகடலின் மலர்வதொரு புதுமையென விணைவிழிகள்
பொத்தி னீரே. (47)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொத்திரைக்குங் கரும்பாம்பு வைத்திருக்குஞ் சடைமுடியர்
புலியூர் நாட்டில்
நித்திரைக்கு மிடமின்றி விழித்திருக்கத் தந்தவரென்
னிலைமை யோரார்
இத்திரைக்கும் படநாக மருந்திரைக்கு மிளவேனிற்
கிடமாய் வந்த
சித்திரைக்கும் வைகாசி வசந்தனுக்கு மியானினியென்
செய்கு வேனே. (48)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

செய்ய மேனியா ரையர் மாலயன்
 தேடு மம்பலத் தாடு மீசனார்
துய்ய மால்வரைப் புனமி ருந்தபைந்
 தோகை யார்பிரிந் தேகி னார்கொலோ
கொய்யும் வார்தினைக் கிளியி னங்களே
 கோகி லங்களே கேக யங்களே
மையல் யானையின் பிடியி னங்களே
 மானி னங்களே தேனி னங்களே. (49)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தேனிக்கு மடியவர்கள் வந்திக்கு மம்பலவர்
 தில்லை நாட்டில்
நானிக்கு மதன்கணைக்கு நரலைக்கு மபலவர்கள்
 நகைக்கு மஞ்சேன்
கூனிக்குங் குமுதமல ரலர்மதிக்கு முதிர்வேனிற்
 கோடை நீங்கா
ஆனிக்கு முடனான வாடிக்கு முயிர்தரிப்ப
 தருமை தானே. (50)

### கலிநிலைத்துறை.

அரும்பு தான்சில வவபவ மலர்வடி வாகுங்
கரும்பு தேன்மொழி கமுகமுஞ் சங்கமுங் கழுத்தாம்
விரும்பும் தென்புலி யூரர்மால் வரையின்மின் னார்க்கு
நிரம்பு தேர்படர் திரைகடல் கடிதட நிதம்பம். (51)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நிதம்பதட மயிலேகொள் ளிடங்கடந்தோ மினிச்சற்று
நேரஞ் சென்றாற்
பதம்பரவு மாயிரக்கான் மண்டபமுந் திருமதிலும்
பசும்பொற் றேருஞ்
சதம்பெறுகான் மண்டபமுஞ் சிவகங்கை யுடன்கனக
சபையுந் தில்லைச்
சிதம்பரமுங் கோபுரமுந் தில்லைமூ வாயிரவர்
தெருவுந் தானே. (52)

கட்டளைக்கலித்துறை.

தெருவார வாரங்கள் வண்டின மேசெவி கேட்டவுடன்
உருகாது வீழ்ந்திடும் வண்டின மேபுலி யூரரன்பு
தருவா ரெனமிக வண்டின மேயவர் சந்ததமும்
மருவா விடிலொரு நாளுக மானது வண்டினமே. (53)

ஐயந்தெளிதல்

மருட்பா.

வண்டறை தாமரை வைகுதலாற் கண்டேன்
புலியூர் தொறுந்திரி பிரமரங்காள்
புலியூ ரணங்கிவள் பொன்னனங் கலளே. (54)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொன்னுருஞ் சடைக்காடு தனைக்கண்டோ கங்கையெனும்
புனலைக் கண்டோ
எந்நாளுந் திகழறுகு தனைக்கண்டோ வம்புலிமா
னினத்தைக் கண்டோ

அந்நாளிற் கருமானின் றோலுரித்து மருங்கசைத்த
வச்சந் தானே
தன்னைசை யாற்புலியூ ரம்பலவர் கரத்தின்மான்
றாவுந் தானே. (55)

## கொற்றியார்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தாவிந்து மதிச்சடையார் நடமாடுஞ் சிதம்பரத்துத்
தளத்தே தில்லைக்
கோவிந்தர் திருவடிகள் சேவிக்கும் படிவந்த
கொற்றி யாரே
மேவிந்த மதியிருக்கக் கரும்புயலை யேன்மறைத்தீர்
மேகத் தாலே
மாவிந்து வினைத்திரும்ப மறைத்தாலின் னமுஞ்சிலநாள்
வாழ லாமே. (56)

வேறு.

வாழும் புலியூ ரெனுநாமம் வைய
முழுதும் பரந்ததலால்
ஆழும் புனல்சூழ் சீரங்கத் தாலைக்
களத்து முளதாமால்
வீழும் பொழுதங் கண்ணுறங்கி விழிக்கும்
பொழுது மாலயங்கள்
சூழும் பொழுது மறவேன்யான் றுஞ்சும்
பொழுதுந் துதிப்பேனே. (57)

### சந்தவிருத்தம்.

துதிக்கை வீசிய மறமத வாரண
முரித்த போர்வையர் முனிவர்க டேவர்கள்
துதிக்க வேவரு கனக சபாபதி யெனுமீசர்
மதிச்ச டாடவி மழவிடை யார்முகில்
எருக்கு மாலிகை யிதழியை யேபுனை
வரைப்பு யாசலர் வளர்புலி யூர்வரு மயில்போல்வாய்
உதித்த மாமதி தழலல வோபினை
எனக்கு நீரொரு துரைபல வோவினி
உமக்கு நானொரு பயலல வோதய விலையோதான்
கொதித்த மாமத னடுகணை யேவிட
முழுப்பி ராணனு மறையுயி ராயுள
குறைப்பி ராணனு மழியுதை யோதலை விதிதானே
(58)

### நேரிசையாசிரியப்பா.

விதிவழி தவறிய மதியி லாவெனை
மெய்த்தவம் புரியாப் பித்தனிவ னென்று
மன்பதை யுலகத் தன்பர்க ணகைத்தனர்
ஆழியம் புவியி லனைவரும் பழித்த
வேழையென் றிகழா தென்னையுந் தாங்குறுஞ்
சூதமு முல்லையு மசோகமுங் குவளையு
மீதுயர் கஞ்சமும் வெளிப்பட மலர
வெந்திறல் வாலியைத் தந்தைகொன் றதுபோல்
ஒளித்துநின் றெய்த வொண்சிலை மாரனை

முழுத்திரை கொழிக்கு முத்தவெண் ணகையான்
மருங்குசூழ் கிடந்த கருங்கட னகைக்கு
மல்லலம் பெரும்பணை வயல்சூழ்
தில்லையம் பலவர் தென்புலி யூரே. (59)

## அம்மானை

### லித்தாழிசை.

தென்புலியூ ரம்பலவர் தில்லைச் சிதம்பரத்தே
வெம்புலியொன் றெங்நாளு மேவுங்கா ணம்மானை
வெம்புலியொன் றெங்நாளு மேவுமே யாமாகில்
அம்பலத்தை விட்டே யகலாதோ வம்மானை
ஆட்டைவிட்டு வேங்கை யகலுமோ வம்மானை. (60)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மானுலாம் விழியுமையாள் கற்பலகை நீக்கிநின்ற
    மடவாள் பங்கன்
ஊனெலா நடுங்கமடங் கற்பலகை யுடையோனை
    யுருத்து வென்றோன்
கானிலே நடமாடுங் கற்பலகை யுடனடிக்குங்
    கடவு டில்லைப்
பானிலா மதிச்சடையான் கற்பலகை யென்பர்சங்கப்
    பலகை தானே. (61)

## பாண்

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கற்பலகை தனிலிருந்து கவியுரைத்த புலவனூர்
    கருணை தன்னாற்
பொற்பலகை பெற்றீரே யாதலா லித்தனையும்
    பொறுத்தேன் கண்டீர்

எற்பலகை போற்பசியா லெங்கையர்பாற் றாதுசென்றீ
ரிங்கும் வந்தீர்
பற்பலகை தனிலேற்பீர் வீணரு ராயிருந்தீர்
பாண ரேரே. (62)

நேரிசைவெண்பா.

பாணன் பெறப்பொற் பலகை யளித்ததில்லை
வாண னெனையாள வல்லானே – வீணன்போல்
அக்கமல முற்று மடிப்போது தந்துமுள்ளக்
கற்கமல முற்றுங் கடந்து. (63)

கட்டளைக்கலித்துறை.

கடித்தான்விளங்கும்பறவைவையைவேட்டுவன்கண்ணிவைத்துப்
பிடித்தா லெனவொரு காட்சியுண் டானது பேய்முலைப்பால்
குடித்தான் மலர்கொண் டருச்சித்த போது குழகன்செய்ய
அடித்தா மரையில் விழித்தா மரைசென் றகப்பட்டதே.(64)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அகப்பட்டே னதிமோக வலைப்பட்டே னின்பழைய
வடியார் தம்மால்
நகப்பட்டே னுயவர்க ளுப்பட்டை யெழுவைது
நாண மில்லேன்
முகப்பட்ட மதயானை யுரியுடையாய் தஞ்சமென
முறையிட் டாளாய்ப்
புகப்பட்டேன் றென்புலியூ ரம்பலவா பொறியற்றேன்
போற்றி னேனே. (65)

## வகுப்பு.

பொறியா டரவினை யரைக்க சைத்தனை
புகையார் திரிபுர நகைத்தெ ரித்தனை
புலவோர் தமிழிரு செவிக்குள் வைத்தனை
புயமே லுமையிரு குயப்பொ ருப்பினை

பெறவே நெறிதனை யெனக்க ளித்திலை
பிறவா வகையெழு பிறப்ப றுத்திலை
பிரமா வெழுதிய வெழுத்த ழித்திலை
பெரியோ ரிணையடி தொழப்ப ணித்திலை

அறநூல் வழியெனை நடத்தி வைத்திலை
அடியார் சபைநடு விருத்தி வைத்திலை
அருளா ரமுதினை யருத்தி வைத்திலை
அடியேன் மனதினி லுருக்கம் வைத்திலை

சிறைசா லையிலெனை யடைத்து வைத்தனை
செலதா ரையிலெனை யகப்ப டுத்தினை
சிவகா மியையொரு புறத்தில் வைத்தனை
சிவனே சபையினி னடித்த சித்தனே. (66)

## கலித்தாழிசை.

நடிப்பார்தென் புலியூரி னம்பரிடம் பிரியாமெல்
லடிப்பாவை சிறுமருங்கு லாற்றியிருந் ததுபாரீர்
கொடிப்பாதி யாயிரண்டு குடஞ்சுமந்து வடஞ்சுமந்து
முடிப்பாரஞ் சுமந்துமொரு முருகனையுஞ் சுமந்ததுவே. (67)

### மறம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

முருகனைக்குந் தார்வேந்தன் விடுதூதா விமயவரை
முதல்வி தன்னை
அருகணைக்கு மம்பலவர்க் காட்பட்ட மறக்குலமென்
றறியான் போலும்
பொருகணைக்குஞ் சிலைமாரன் பூங்கணைக்கு மறவர்குலப்
பூவை வாட்கண்
இருகணைக்கு மிலக்கானு லெங்களொரு கணைக்கிவனே
யெதிர்நிற் பானே. (68)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நில்லாத வெழுபிறப்புந் தொல்லை யல்லல்
நீக்குசிவ காமவல்லி நிலையுந் தொல்லை
செல்லாரும் பொழில்புடைசூழ் சிதம்பரமுந் தொல்லை
திருமூலட் டானமொடு சிவகங்கைதொல்லை
சல்லாபந் தருமகுடா கமமுந் தொல்லை
தலபுரா ணமுந்தொல்லை சபையுந் தொல்லை
சொல்லாரு நான்மறையுந் தொல்லை தில்லைச்
சோதிநட மாடுவதுந் தொல்லை தானே. (69)

### ஊசல்

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தொல்லைமறை யம்பலவ ரூச லாடச்
சுரர்முனிவர் மலரயன்மா றொழுது போற்றக்
குல்லைமகிழ் சண்பகமா தவிமந் தாரை
கொன்றைமலர் சொரிந்தடியர் குணங்கள் பாட

முல்லைமுகை நகையரும்பப் பசும்பொன் னேலே
முகமதியின் முத்தரும்ப வரம்பை மாதர்
தில்லைவளம் புகழுவினி தாடீ ரூசல்
சிவகாம சுந்தரியா ராடீ ரூசல். (70)

நேரிசைவெண்பா.

ஆடிய வெண்பிறையோ டந்தரத்தின் மேற்கொழுந்தா
யோடிய செக்கர்வா னொக்குமே — நீடியகோ
பங்கக் குழையான் படைமழுவான் றென்புலியூர்
சங்கக் குழையான் சடை. (71)

## குறம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சடைமுடிக்கு மம்பலவர் வந்தணைவ ரென்றகுறி
தப்பா தம்மே
கொடைமுடிக்கும் படிசொன்னல் குறத்தியல்ல யானுமொரு
குசத்தி கண்டாய்
கடைதுடிக்கும் விழியிரண்டு மிடந்துடிக்குந் துடிக்குமிடக்
கரமுந் தோளுந்
துடிதுடிக்கு மிடப்புருவந் தனந்துடிக்குந் துடிக்குமிடத்
தொடையுந் தானே. (72)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தொடையாடச் சிறுசதங்கை துதைந்தாடச் சிவகணங்க
டுணங்கை யாட
உடைவாளிற் பசுங்குருதிக் குழம்பாடச் சிறுத்தொண்ட
ருவகை யாட

நடையாடு பசுங்குழவித் தசைவிரும்பி னூர்புலியூர்
நம்பர் பாரி
னிடையாடு புலிக்குருளைக் கெப்படிபாற் கடலூட்ட
வெண்ணி னரே. (73)

### கலித்தாழிசை.

எண்ணினுக்கு ளடங்கிடாதவர் தில்லையம்பல வாணனூர்
இவரளித்திடு மதனமோகன மிவண்மனத்தி லடங்குமோ
விண்ணினுக்கு ளடங்கிடாது விரித்தெழுந்திடு வெண்ணிலா
விரகினுக்கு ளடங்கிடாது விசைத்தெழுந்திடு காமநோய்
மண்ணினுக்கு ளடங்கிடாது வசந்தகால வசந்தனும்
வாசகத்தி லடங்கிடாது மடந்தைபட்ட வருத்தமுங்
கண்ணினுக்கு ளடங்கிடாதிவள் கண்ணிலேவிழு கண்ணினீர்
காசினிக்கு ளடங்கிடாதிவள் காதல்கொண்ட விலாசமே.
(74)

### கட்டளைக்கலித்துறை.

மேலண்டர் போற்றும் புலியூரர் பாம்பின் விடத்தையஞ்சி
மாலஞ் செழுத்துந் திருநீல கண்டர் மணியும்பொற்றூர்
நீலந் தருமணி சின்னப் படாம னிறுத்தநிலாப்
பாலும் பசுந்தழை யுங்கை விடாது பரிந்தனனே. (75)

## சித்து.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பரிசித்து நறுமலர்கொண் டருச்சித்து மம்பலவர்
பதத்தை நன்றாய்த்
தெரிசித்து நேசமுடன் பூசித்துந் திரிகின்ற
சித்த ரப்பா

வருசித்தர் தமைக்கண்டால் வஞ்சித்து நயம்பேசி
வழிவி டாமல்
ஒருசித்தர்க் கமுதளித்தா லொன்பதினா யிரம்பசும்போ
னுதவ லாமே. (76)

இன்னிசைவெண்பா.

உதயமே ருப்பொருப்போ டொப்பர்சபை வாணர்
துதயவே நீறணி வாய்தூய் திருப்பர்
கதையைமீ தேயெழுதிக் கட்டிவைத் தாலென்
இதயமே சம்பந்த ரேடு. (77)

## சம்பிரதம்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏடியும் புலவனும் போலவே யூமைதனை
யின்னமும் பேசுவிப்பேன்
இவுளிதனை நரியாக்கி நரியையும் பரியாக்கி
யிந்திரசா லம்பண்ணுவேன்
வாடியுடல் வேர்வொழுக மதுரையிற் பிட்டுக்கு
மண்சுமந் தைபர்முன்னாள்
வைகையை யடைத்தபடி கடலையு மடைத்திடுவன்
மண்ணுலகி லிதுவித்தைபோ
பாடியும் பரவியுந் தேடாமன் மாயனும்
பத்மாச னக்கடவுளும்
பன்றியும் பறவையுந் தானாகி முண்டகப்
பாதமுஞ் சடைமகுடமுந்

தேடியுங் காணாத திருவுருவை மார்கழித்
திருமஞ்ச னத்தில்யார்க்குந்
தெரிசிக்க வும்பண்ணி யனவரத நடனமுஞ்
சேவிக்க வும்புரிவனே. (78)

கலிநிலைத்துறை.

புரிநூல் புனைவார் திருநீ றணிவார் புலியூரர்
பரிபூ ரணராய் மடவா ருயிரே பலிதேர்வார்
எரிநீ றிடவே நகுவார் பகுவா யெருதேறி
வருநா யகமா னசையால் பலகால் வருவாரே. (79)

## மேகவிடுதூது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வருடிக்கு மழைமுகில்கா ளெனதாசைக் கடல்சுவற்ற
மன்று ளாடுங்
குரிசிற்கு நீர்மொழிந்தா லாவிபெற லாமெமக்குங்
கொண்டல் காளோர்
இருடிக்கும் பதஞ்சலிக்கு மிடைநடுவே நடனமிடு
மிருபா தங்கள்
தெரிசிக்க லாமுமக்குஞ் சேவிக்க லாம்புலியூர்ச்
சிவனைத் தானே. (80)

வஞ்சிப்பா,

சிவகங்கையுந் திருமதிலும்
மணிமன்றமு மதிமுகமும்
பவளவாயும் படர்சடையும்
தவளநீறுந் தமருகமும்

சிவந்தகாலுங் கருமிடறும்
பசந்ததாரும் பனிமதியும்
புண்டரமொடு புலியதளும்
குண்டலமொடு குரைகழலும்
கண்டவன்
புன்பிறப் பகற்றினை புனிதா
என்பிறப் பறயா னென்றுகாண் பதுவே. (81)

சந்தக்கலிநிலைத்துறை.

வேத புராண சபாபதி யாகிய வேதாளர்
தாதகி மாலையர் தாமரை யாகிய தார்தாரார்
மாதர் புருமயில் கேகய மாமுகில் வாழ்பூவை
ஓதிம மாமிவை போவது மீள்வது மோயாவே. (82)

கலித்தாழிசை.

ஒப்விதண்டையில்லைதில்லையம்பலத்துளாடுவார்
ஒருவரன்பிலாமைகொண்டொருத்தரோவிதண்டைமுன்
போப்விதண்டையிட்டுமீள்வரன்னைமார்கள்தோழிமார்
புலவிதண்டையிட்டுநிற்பர்புள்ளெலாம்விதண்டைகாண்
வேப்விதண்டையுறவினோர்கள்வெகுவிதண்டைகண்ணிலா
வெண்ணிலாவிதண்டையூர்விதண்டைமற்றமின்னனூர்
வாய்விதண்டைநீலிபெற்றதாப்விதண்டையிவையலால்
வாரியேழுமேவிதண்டைமாரவேள்விதண்டையே. (83)

நேரிசைவெண்பா.

தண்ணார் பொழிற்றில்லைச் சங்கரனார் சீர்பிழைத்தாற்
கண்ணா யிருந்து கலந்தாலும் — எண்ணார்கொல்
வேர னுமிழ்ந்ததழல் வேள்வியனற் கையுடம்பு
மூர னுமிழ்ந்தசுடர் மூன்று. (84)

## தழை.

கட்டளைக்கலித்துறை.

மூதந்த மாந்தில்லை யம்பலக் கூத்தர் முனிவர்விண்ணோர்
போதந்த மாந்தர் புகழ்புலி யூரர் பொருப்பிறைவா
மாதந்த மாந்தன பாரத்தி லேபொற்றி வாழ்ந்தனள்காண்
நீதந்த மாந்தழை யாவியன் றேவெங்க ணோரிழைக்கே. (85)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நேராடல் புரிபரமர் புலியூர்ச்சிற் றம்பலவர் நிமல நாட்டில்
வாராடு களபமுலை வடமாட விளையாடு மடவார் கண்கள்
போராடு மெதிராடு முறவாடும் வரிக்கயலைப் போந்து சாடுந்
தாராடு மிளைஞோரைச் சண்டையிடு மணிக்குழைபைச்
[சருவுந் தாமே. (86)

## பிச்சியார்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சருவிச்சீ ராட்டுமொரு பஞ்சவன்னக் கிளியேந்தித்
தவத்தோர் காணத்
தெருவிச்சீ ராபணிந்த கஞ்சுளியுந் திருநீறுந்
தெரிசித் தோரைப்
பொருவிச்சீர் போராசை பூண்பிச்சீர் சண்டையிடு
பூச லெல்லாம்
வருவிச்சீர் மடலேற வைப்பிச்சீர் சிவன்புலியூர்
வரும்பிச் சீரே. (87)

இன்னிசைச்சிந்தியல் வெண்பா.

சீரணங் கண்ட திருநீல கண்டர்பரி
பூரணங் கண்ட புலியூர் தொழுதெழுவார்
ஆரணங் கண்டா ரவர். (88)

மடக்கு

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அண்டர் காணநெஞ் சங்கவன் றுயிலை
அத்த னேயிலை யங்கவன் றுயிலை
புண்ட ரீக புரநடந் தேறிலாய்
பொன்னின் வாயிற் படிநடந் தேறிலாய்
மிண்ட ளைவுங் காலங் கழிந்ததே
மிகவி ரந்துண்டு காலங் கழிந்ததே
தெண்ட னைவ ரங்கிடங் தில்லையே
செம்பொ னம்பல வர்க்கிடந் தில்லையே. (89)

இடையினச் சந்தவிருத்தம்.

தில்லையர னெல்லைதிரு நெல்லைதிரு முல்லை
நல்லமொடு வில்லைவன நெல்லிவன நல்லூர்
மல்லைநகர் கொல்லமொடு வில்லிபுரம் வல்லம்
குல்லைவன நல்லநகர் கொல்லிமலை யாமே. (90)

கட்டளைக்கலித்துறை.

ஆயுந் தனயரும் பெண்டிரு மாயலைந் தேனடவிப்
பேயுந் தனயரும் பெண்டிரு மாயிற்று பேதமுண்டோ
நாயுந் தலைமுறை யேழா னதுநட ராசவின்னம்
ஓயும் படிக்கில்லை போவைய னேயென் னுயிரினுக்கே. (91)

நிலைமண்டில ஆசிரியப்பா.

உயிர்த்தன ளாமோ வுறவின ரொலிப்பச்
செயிர்த்தனள் செவிலி தேய்த்த சிறுபறை
அஞ்சுகக் கிளவிக் கையவி யப்பி
வெஞ்சினக் கூளிகை விலக்குந ரொருசார்
நித்திலக் குதம்பை நீரெழ நிவந்த
கைத்தலங் கதுவாது கன்றிழுந் தெனவே
அதனால்,
காரியொடு கழறவுங் களிய ளியம்பவும்
நாரியொடு நவிலவு நாவெழுந் திலளே. (92)

சந்தக்கலிநிலைத்துறை.

கல்லுங் குழையும் படிநின் றடருங் கருதாரைப்
புல்லும் புரமுன் பொடிகண் டவர்தென் புலியூரில்
வில்லுங் கழலும் புயலுங் கொடுவென் றிளைஞோரைக்
கொல்லும் படியென் னெதிர்நின் றதுமின் கொடிமானே. (93)

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மாழைமா மயில்போன் மாழைநேர் விழியாண்
மாழைசேர் வனமுலைவெதும்பா
மாலைமா மதியான் மாலையே நிகர்வாண்
மாலையே தவிர்த்தருள் புரிவாய்

சூழுமா லிகையால் சூழுமா துயரால்
சூழுமா றென்றையு முணராள்
சூதுவா தறியாள் சூதமே னியினுள்
சூதுநேர் முலையின்மீ தணைவாய்
வேழமா மலையே வேழவீ ருரியாய்
வேழமா மதனைவென் றவனே
வேலையா ரமுதே வேலைநேர் விழியார்
வேலையே தவிர்வாழ் வருள்வாய்
ஆழிமால் கடலே யாழிமால் பரவும்
ஆழிசேர் விரலுமை கணவா
அம்பலத் தமுதே யம்பலத் தடஞ்சூழ்
அம்பலத் தமரர்சே கரனே. (94)

நேரிசைவெண்பா.

கரத்தாற் றொழுதிடினுங் கண்டிறைஞ்சி னுஞ்
சிரத்தால் வணக்கஞ் செயினும் — உரைத்திடினுந்
தில்லைக்கப் பானின்று சேவித்தா லுஞ்சனனம்
எல்லைக்கப் பானிற்கு மே. (95)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எல்லைக்கோ புரநான்குங் கொடிமுழங்க நிதிவழங்கு
மிறைவீ ரெங்கள்
தில்லைக்கோ விந்தர்தொழு மம்பலவர் திருநாடா
செம்பொன் வேண்டேம்

கொல்லைக்கோ மழவிடையின் கொழுந்துமட மணிமார்பிற்
குளித்த பின்பு
முல்லைக்கோ வின்மடந்தை முலையாளைக் கோடீண்டு
முழங்குந் தானே. (96)

கட்டளைக்கலித்துறை.

தான விலங்கைத் தழைகொண்டெப் தேனென்பர் தானவரங்
கான விலங்கை யழித்தவர் போனிற்ப ராதலினல்
ஈன விலங்கை விடுத்தாள் பவர்தில்லை யீசர்வெற்பில்
வான விலங்கை வளைத்தெய்கு வாரிந்த மன்னவரே. (97)

கலிவிருத்தம்.

மன்னேவென் பிறப்பறுக்க வல்லவருண் டெனிலடியேன்
என்னுலெம் பிறப்பறுக்கக் கடவேன்கா ணெம்பெருமான்
உன்னாலும் பிறப்பறுத்தற் கரிதெனிலொண் புலியூரா
பின்னான்மற் றனேவோருங் கொடிக்காளம் பிடிப்போரே. (98)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

போரு வானவர் சூழ்ந்தசிற் றம்பலம்
புலிப தஞ்சலி போற்றுசிற் றம்பலம்
பாரு ளோர்கள் பரவுசிற் றம்பலம்
பரம னாடக மாடுசிற் றம்பலம்
ஏரு லாவுசிற் றம்பலஞ் செம்பொனால்
எழுதி மேய்ந்தசிற் றம்பல மெம்பிரான்
சீரு லாமுறை பாடுசிற் றம்பலஞ்
செம்பொ னம்பலந் தில்லைச்சிற் றம்பலம். (99)

## உயிர்வருக்கமோனை ஆசிரியப்பா.

அம்பலக் கூத்தன் ஆரூர் மானவன்
இடைமரு தீசன் ஈங்கோய் மலையினன்
உறையூ ரெந்தை ஊறன்மா நகரினன்
எறும்பிமா மலையினன் ஏடகத் துறைவோன்
ஐயா றமர்ந்த வமரர்கள் பெருமான்
ஒற்றியூ ரிறையோன் ஓமாம் புலியூர்ச்
சிற்றம் பலவன் சீர்பர வுதுமே. (100)

திருச்சிற்றம்பலம்.

---

தில்லைக்கலம்பகம் மூலம் முற்றிற்று.



உ

சிவமயம்.

# தில்லைக்கலம்பகம்

## செய்யுள் முதற்குறிப்பகராதி.

செய்யுள் எண்.

—0—